*Ñāṉacampantam*

*Malar 14, itaḻ 3*

*February 10, 1955*

Record no. 357

# ஞானசம்பந்தம்

மலர் 14 ]   ஜயயாண்டு தைத்திங்கள்   10—2—55   [ இதழ் 3



வெள்ளித்தேரில் வேளூர் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி

வித்துவான், சோமசுந்தரத் தம்பிரான்

# உட்பொருள்



அட்டை பக்கம் 3, 4 நமது அஞ்சற் பெட்டி, கடிதங்கள்

நிழற்படங்கள்:- மீனாட்சிசுந்தரம், தருமபுரம்.

உ
குருபாதம்






# தருமபுர ஆதீன ஞானச் சின்னம்
# விளக்கம்

1. **பீடம்:-** ஞானபீடம்,

2. **கோவில்:-** கடவுட்பணி, வேத சிவாகம பரிபாலனம், வழிபாடு,

3. **சுவடிகள்:-** மக்கட்பணி, கல்வி நிலயங்கள், நூல் நிலையங்கள், நூல் வெளியீடுகள்.

4. **வீணை:-** பண், திறம் முதலிய நுண்கலைகள்.

5. **ஆவும் புலியும்:-** நட்புக்கொண்டு ஒருதுறையுள் நீருண்ணல், தருமை ஞானபூமியில் ஓங்கும் அருளன்பு.

6. **இயற்கைக்காட்சி:-** நீர் நிலவளம் மிக்குச் சோலைகள் செறிந்து சூழக் காவிரிக் கரையிலுள்ள தருமையின் எழில்.

7. **'எல்லாம் சிவன் செயல்'**

'அவரவருக்கு உள்ளபடி ஈசன் அருளாலே
அவரவரைக் கொண்டு இயற்றும் ஆனல்—அவரவரை
நல்லார் பொல்லார் என்று நாடுவது என்? நெஞ்சமே
எல்லாம் சிவன் செயல் என்று எண்'

(சிவபோகசாரம் 73)

என்று ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருளிய உபதேசப் பயனாகும் சிவஞானநுபவம்.

தருமபுர ஆதீனம் 25-ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களை



குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் 7-ஆவது ஆண்டுவிழாவில்
எதிர்கொண்டு வரவேற்றல்.



தருமபுர ஆதீனம் 25-ஆவது குருமகாசந்நிதானம் அவர்களுக்கு



குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் 7-ஆவது ஆண்டுவிழாவில்
வரவேற்பு வாசித்தளித்தல்.

திருவண்ணாமலை ஆதீனம் குன்றக்குடி

ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் கீழைநாடுகளுக்கு எழுந்தருளுமுன்



தருமபுர ஆதீனக் கல்வி நிலயங்களின் சார்பில் வழியனுப்பு உபசாரம்



உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 14 } ஜயயாண்டு தைத்திங்கள் 10—2—55 { இதழ் 3

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. —சம்பந்தர்

திருச்சிற்றம்பலம்

## "தமிழ்ப் பெருமை யார் அறிவார்?"

குமரகுருபர சுவாமிகள் அருளிய நூல்கள் எல்லாம் செந்தமிழ் வளம் நிரம்பியவை. அக்காலத்திலும் மொழிப் பற்று மிக்கிருந்தது. இருந்தும், பிறமொழியை வெறுப்பது இல்லை. சுவாமிகள் திருவருளாளர் ஆதலின், வடமொழி தென் மொழி இரண்டன்பெருமைகளையும் குறைவற உணர்ந்தவர்கள். 'வடநூற்கடலும் தேக்கும் செழுந்தமிழ்ச் செல்வமும் தொண்டர் செந்நாவில் நின்று காக்கும் கருணைக் கடலே சகலகலாவல்லியே' 'துறைத் தமிழொடும் தொன்மறை தெளிக்குங் கலைக்கொடி' என்னுமிடத்தில், வடமொழியைக் கடலென்று குறித்ததால் சுவாமிகளுக்கு அம்மொழியில் உள்ள அளவிலாத கருத்தின் பரப்பிற்கும் அக்கடலை ஒப்புரைக்கலாம். 'பூமேவு செங்கமலப் புத்தேளும் (நான்முகனும்) தேறரிய (தெளிய முடியாத)

பாமேவு தெய்வப் பழமறை' என்று வேதத்தின் மேன்மையைத் தான் முதன்முதலாக அவர்கள் திருவாய் வெளியிட்டது. 'பழமறை' யென்றதால் அதனது அநாதித்துவம் விளங்கிற்று. பிரமனும் தெளிவதற்கு 'அரியபா' மேவியதால் அதன் பொருட் சிறப்பு வெளியாயிற்று. 'தெய்வப் பழமறை' என்றதால், அதனது தெய்விகம் புலனாயிற்று. 'வடகலை தென்கலையொடு பயிலும் கவிவாணர்கள் ஓடி வர முழக்குக சிறுபறையே' என்றருளியதைநோக்கின், நம் சுவாமிகள் காலத்தில் இருமொழி யையும் பெருவிருப்பொடு கற்றுப் பயிலும் வழக்கம் இருந்தது என்று புலப்படும். 'வடகலை அல பலகலையொடு தமிழ்வளரும் கூடல்' என்று திருமருதந்துறையைக் குறித்தமையால் அக்காலத்து மதுரையின் கலைச்சிறப்பு நன்கு விளங்கிற்று. 'வடகலை தென்கலை பல கலையும் பொதி மதுரை வளம்பதியே' என்று பாடியதால் நகர்க்குச் சிறப்பு எல்லாக்கலைகளும் இலங்குதலே எனக் குறித்தருளினார்கள். தமிழ்த் திருமுறையை உணர்த்தும் இடத்தில்,

''**செழுமறை தெளியவடித்த தமிழ்ப்பதிகத்** தோடே
திருவரு ளமுது குழைத்து விடுத்த முலைப்பாலால்
கழுமல மதலை வயிற்றை நிரப்பி மயிற்சேய்கைக்
களிறொடும் வளர வளர்த்த அருட்செவிலித் தாயே''

என்று திருஞான சம்பந்தர் அருளிய தமிழ்ப் பதிகம் வேதத் தெளிவே ஆதலை விளக்கியருளினார்கள். 'மதுரச் சொற்பொலி பழம்பாடல் சொல்லுகின்றவளும் நீ' 'பழையபாடற் புள்ளொலி யெழக்குடிபுகுந்த சுந்தரவல்லி' 'தொடுக்குங் கடவுட்பழம்பாடற் றொடையின் பயனே நறைபழுத்த துறைத்தீந்தமிழின் ஒழுகும் நறுஞ்சுவையே' என்று பாடியவற்றையும் இங்கு எண்ணுதல் வேண்டும். இவற்றால், மொழிவேறுபாடு பற்றிய இக்கால விபரீதப் போக்கு, ஆரியனும் தமிழனுமாகிய கடவுளடியவரிடத் தில் அக்காலத்தில் சிறிதும் இல்லை என்பது இனிது விளங்கும்.

அத்தகைய திருவுள்ளம்வாய்த்த முனிவர் பெருமானார்க்கும் தமது செந்தமிழ்த் தாய்மொழிப்பற்று மிகுந்திருந்ததுதான் பெரு வியப்பை ஊட்டுகின்றது. சிவபிரான் (காசி விசுவநாதர்) பிரணவப்பொருளை எல்லோர்க்கும் வரையாது வழங்கும் வள்ளல். காசியில் இறப்பவர் எல்லோரும் பிரணவத்தை



உபதேசிக்கப் பெற்றுச் சிவ சாரூப முத்தி எய்துவர் என்பது ஐதிகம். 'உரையாத பழமறையின் முதல் எழுத்தின் ஒண் பொருளை வரையாது கொடுத்திடும் நின் வள்ளன்மை வாழ்த்து துமே' என்பது காசிக் கலம்பகப் பாடற் பகுதி. அச்சிவ பெருமான் திருத்தோள்களோ 'தருசுவை அமுது எழ மதுரமது ஒழுகு பசுந்தமிழ் மாலை நிரம்பப் புனைந்தன' (திருமேனி) என்றும், அவர் (திருவுள்ளம்) உருகும்படி செய்யும் ஆற்றல் தமிழ்ப் பாட்டிற்கு உண்டு. 'பாட்டுக்கு உருகும் தமிழ்ச் சொக்கநாதர்' என்றும், 'உலகு அளித்தனை தமிழ் தெளித்தனை' (திருவாய்) என்றும் இறைவனுடைய முப்பொறிகளும் தமிழொடு தொடர்புடைமை கூறப்பட்டது. தில்லை மன்றில் இருக்கின்றவற்றுள், மூவர் தமிழ்ப்பாட்டு மட்டுமே நம் சுவாமிகள் நினைவில் முன்வந்து நிற்க,

'பரசிருக்கும் தமிழ்மூவர் பாட்டிருக்கும் திருமன்றில்
பரசொன் றேந்தி
அரசிருக்கும் பெருமானார்க்கு ஆட்செய்யார் என்செய்வார்
முரசிருக்கும் படைநமனார் முன்னாகும் அந்நாளே'?

என்று பாடியருளினார்கள். நடராசப்பிரானுக்கு ஆட்செய்ய விரும்பினோர் மூவர் தமிழினைத் துணைக்கொள்ளல் வேண்டும் என்ற கருத்தும் அவர்க்கு உண்டுபோலும். மூவர் பாட்டால் சிவபிரானை அருச்சிப்பவர் காலனை அஞ்சாத மேலராவர் என்றும் அஃது உண்மை என்று நிறுவுவாராய்ப் பரசு (மழு) ஏந்தியிருக்கின்றார் என்றும் கொள்ள இப்பாடல் இடம் கொடுக்கின்றது.

சோமசுந்தரக் கடவுள் வேதத்தின் சுவையை வாயால் நுகர்ந்தறிந்த அநுபவம் உடையவராயிருந்தும் புதிய அமுதமாக வழிந்து ஒழுகும் இனிய கன்னித்தமிழின் மழலையைச் செவியில் ஏற்று உவந்தார் என்றால், வேதத்தை உரைத்த அம்முழு முதல்வரே தமிழின்பத்திற்கு அங்கலாய்த்தார் என்பதை அறியலாம் அன்றோ?

''பொழிந்தொழுகு முதுமறையின் சுவைகண்டும் புத்தமுதம்
வழிந்தொழுகும் தீந்தமிழின் மழலைசெவி மடுத்தனையே''

முத்தமிழ்க்கு ஒரு பயனுவான் சவுந்தர பாண்டியன் என்று அருளிய ஆசிரியர்க்குச் செந்தமிழ் வேறு சிவபிரான் வேறு என்னும் எண்ணம் உண்டோ?

" தலைச்சங்கம் பொங்கும்
பண்முத் தமிழ்க்கோர் பயனே சவுந்தர பாண்டியனே "

மீனுட்சியம்மையார் செந்தமிழ் நாட்டை ஆண்டருளியவர். அவர் அப்பாண்டிநாட்டில், தோன்றும்போது முன்னர்த் தமிழ் மொழியைத் தோற்றித்தான் பின்னர்த் தோன்றினர். அம்மை யருளைச் செங்கதிரோனும் அருமைத் தமிழைச் செங்கதிரும் ஆகக்கொள்ளின், கதிரோன் தோன்றுமுன் (சூரியோதயத்துக்கு முன்) கதிரொளி தோன்றுவது (அருணேதயம்) போலும் எனலாம். எனவே 'தமிழொடு பிறந்து பழமதுரையில் வளர்ந்த கொடி சப்பாணி கொட்டியருளே' என்று பாடி யருளியதன் கருத்து ஒரு சிறிது புலனுகும். 'முதுதமிழ் உததியில் (கடலில்) வரும் ஒரு திருமகள் (மீனுட்சி தேவியார்) முத்தம் அளித் தருளே' என்றதால், தமிழ்க்கடலில் வந்த திருமகள் இறைவி என்றும் பாற்கடலில் வந்த திருமகள் ('குண்டுபடு பாற்கடல் வருந் திருச்சேடி') இலக்குமி என்றும் புதியதொரு முறையில் உணர்த்திய சிறப்பு ஆசிரியர் குமரகுருபர சுவாமிகட்கே உரியது. ஆளும் அரசி தமிழொடு பிறந்தவள். ஆட்சிக்குரிய இடமும் தமிழகம். அதிலும் செந்தமிழகம். அரசு வீற்றிருக்கும் நகரோ, 'தேக்கமழ் மதுரம் ஒழுகிய தமிழின் இயல் பயில் மதுரை'. 'செஞ்சொற்றமிழ்க் கூடல்'. இளமைப்பொழுதில் அம்மையார் ஏறி விளையாடிய அப்பன் மலயத்துவசனுடைய மலைபோலும் தோள்களையும் எருத்தத்தையும் (பிடரியையும்), 'பண்ணுலாம் வடிதமிழ்ப் பைந்தாமம் விரியும் பணைத்தோள் எருத்தம்' என்று பாடினுர் ஆசிரியர். பாடவே, ஆசிரியர்க்கு, அம்மையார் தோற்றமும் தமிழ்க்கடல், உடன்பிறப்பும் தமிழ். விளையாடும் இடம் எல்லாம் தமிழ். அரசாண்ட நிலமும் தமிழ், எல்லாம் தமிழ் ஆம், இவ்வளவில் அவர் அவா அடங்கிற்றே? இல்லையே! 'நறைபழுத்த துறைத்தீந்தமிழின் ஒழுகும் நறுஞ்சுவையே' என்று, அம்மையாரைத் தமிழ்ச்சுவையாகவே நுகர்ந்து அநுப வித்துள்ள உண்மையையும் நமக்கு உணர்த்தி உவந்தார்.

ஆசிரியர் செந்திலாண்டவனை வணங்கி வேண்டிய வரங் களுள்ளே 'நாற்கவியும்'....... எழுத்து முதலாம் ஐந்திலக்



கணமும் தோய்ந்து பழுத்த தமிழ்ப்புலமை'யும் 'அடியாருடன் கூட்டிப் பரபோகம் துய்ப்பித்துக் கமலக் கால்காட்டி முன்னின் றருள்'வதும் முடிவானவை. அவ்விரண்டும் அவர்க்குச் சிறிதும் குறைவின்றி நிறைந்தன. அவற்றிற்குச் சான்றுகள் அவரருளிய செந்தமிழ் நூல்களெல்லாம் ஆகும். தருமையில் வாய்க்கப்பெற்றதே கடைசிவரம். அதை உணரப் பண்டார மும்மணிக்கோவையைப் படித்தல் வேண்டும்.

பழமறையின் குருந்தாகிய முருகக்கடவுளை 'இமுமென் மொழித் தெளிதமிழின் வடித்திடு நவரசமே' 'மும்மைத்தமிழ் தேர் கந்தபுரி முருகா' 'சங்கத்தமிழின் தலைமைப் புலவா' என்று அழைத்து, தம் கருத்தை வெளியிடுகின்ருர் ஆசிரியர். இதனுல் அம்மாள், அப்பன், பிள்ளை மூவரும் தமிழாகவே ஆசிரியர்க்குக் காட்சி அளித்தலை அறிதல் வேண்டும்.

உலகெலாம் படைத்த அன்னை ஒரு நாட்டையே ஆளும் மன்னவனுக்கு மகளாகப் பிறந்து தடாதகாதேவி என்ற ஒரு பெயர் தாங்க வந்தது தமிழ்த் தண்ணமுதம் உண்ணுதற் பொருட்டேயாகும். தனி முதலாகிய பரமேசுவரன் சவுந்தர மாறனுகியதும், முருகக்கடவுள் உக்கிர குமார பாண்டிய னுகியதும் அவ்வுணவின்கண் வைத்த வேட்கையால் அன்றோ? அதனுல். 'தமிழ்ப் பெருமை யாரறிவார்' என்று ஒரு வினுவைத் தோற்றினுர். அவ்வினுவிற்கு விடை அதுவேயாய் நின்றது. தமிழ்ப்பெருமையார் பலர் இருப்பினும், அவரெல்லாருள்ளும் ஆசிரியர் குமரகுருபர முனிவரரே தமிழ்ப் பெருமையாராய், அத்தமிழ்ப் பெருமையை அறிந்து, தம் நூல்களுள் தொட்ட இடம் எல்லாம் தமிழ்ப்பெருமையையே தோற்றியருளினுர். தமிழ்ப் புலவர்க்கு என்று ஒருபாட்டு இவ்வாறு வேறு எங்கே னும் உண்டோ? 'தெய்வத்தமிழ்' சோமாஸ்கந்தர் மூவருக்கும் வேட்கை விளைத்த உண்மையை வேறு புலவர் கூறியதுண்டோ?

" தமரநீர்ப் புவனம் முழுதொருங்கு ஈன்றுள்
தடாதகா தேவிஎன்று ஒருபேர்
தரிக்கவந் ததுவும் தனிமுதல் ஒருநீ
சவுந்தர மாறன் ஆனதுவும்

குமரவேள் வழுதி உக்கிரன் எனப்பேர்
கொண்டதும் தண்டமிழ் மதுரம்
கூட்டுண எழுந்த வேட்கையால் எனில்இக்
கொழிதமிழ்ப் பெருமையார் அறிவார்?''
(மதுரைக்கலம்பகம். 93)

'ஒருவர்' என்னும் சொல் தமிழில் இல்லையானால், அம்மை யப்பரைக் குறித்தல் இயலாது என்றும் உணர்த்தியருளினர்.

''ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உரு ஒன்றால் அவ்
வுருவைஇஃ தொருத்தன்என்கோ ஒருத்தி என்கோ
இருவருக்கும உரித்தாக ஒருவர் என்று ஓர்
இயற்சொல் இலது எனின் யான்மற்று என்சொல்கேனே''?

தமிழ்க்கு இதனினும் வேறு சிறப்பு ஏன்? தாயும் தந்தையு மாகத்திகழும் ஒருருவை உணர்த்தத் தமிழில் அன்றி வேறு எம் மொழியிலும் ஒரு சொல்லும் இல்லை. இதுவோ குறிப்பதற்கு, அழைப்பதற்கும் உதவ ஒரு சொல் உண்டு. எந்தாய் என்றால், எம்தந்தையே (எம் அப்பனே) எம் தாயே (எம் அம்மையே) என்று இருவரையும் விளிக்கலாம்.

இங்கு ஒன்று நினைத்தல்வேண்டும். அம்பிகை தமிழ்க்குரிய பிராட்டியாயும் கலைமகள் தமிழைக் காப்பவளாயும், உண்ப வளாயும், குளிப்பவளாயும் பிரித்துணர்த்துவது ஆசிரியர்க்கு வழக்கம்.

''வடநூற்கடலும் தேக்கும் செழுந்தமிழ்ச் செல்வமும் தொண்டர் செந்நாவில் நின்று, காக்கும் கருணைக்கடலே சகலகலாவல்லியே''

''கமல வீட்டுள் கொழித்து எடுத்துத் தெள்ளித் தெளிக்கும் தமிழ்க் கடலின் அன்பின் ஐந்திணை எனஎடுத்த இறைநூல் தெள்ளமுது கூட்டுணும் ஓர் வெள்ளோதிமம்!''

''மதுரம் ஒழுகும் கொழி தமிழ்ப்பனுவல் துறைப்
படியும் மடநடை கூந்தலம் பிடி''

வண்டுகளும் பசுந்தமிழின் இசைபயின்றன என்றருளிய பற்றற்ற ஆசிரியர் தமிழ்ப்பற்றுக்கு ஓர் அளவும் உண்டோ?



'வடநூற்கடல்' என்று வடமொழி நூல்களின் பெருக் கத்தையும் 'தமிழ்க்கடல்' (10, 191.) என்று தமிழின் சிவப்பொருளாழத்தையும் நோக்கியுரைத்தமையால் இரண்டும் ஏற்றம் உடையனவாய்க் கடல்போன்றன என்க. அவற்றுள் தமிழ்க்கடலை உண்ணத்தக்க மேகம் ஒன்றும் உண்டு. அது 'பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சை பசுங் கொண்டலே' தமிழில் கடவுளைப் பாடித்தொழுது பேரா இயற்கை பெறச் செய்ய விரும்பித் தமிழர்க்கு அறிவுறுத்தி யருளிய சுவாமிகள் பெருங்கருணையை யாரே அளவிட வல்லார்?

''தடமலர்ப் படப்பைத் தண்டலைக் காசிக்
கடிநகர் புரக்கும் கண்ணுதற் செல்வன்
வேம்பும் கடுவும் தேம்பிழி யாக்ச்
செஞ்செவி கைப்ப யான் தெரிந்த சில்மொழி
அஞ்செவி மடுத்து ஆங்கு அளித்தனன்.''

அதனால்,

''தேத்தமிழ் தெளிக்கும் செந்நாப் புலவீர்!
செந்நெறி வினவுதிர் ஆயின் இன்னிசைப்
பாத்தொடுத்து அடுத்த பரஞ்சுடரை
நாத்தழும் பிருக்க ஏத்துமின் நீரே.''

வாழ்க குமரகுருபரர் திருவடி !

வாழ்க அவர் செந்தமிழ் நூல்கள் !



# மகாமகோபாத்தியாயர்

## டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள்

### நூறுவதாண்டு நிறைவு விழா 19—2—55

நம் ஐயர் அவர்கள் திருவாவடுதுறை ஆதீனத்து மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்களுடைய மாணாக்கர் பலருள் சீர்த்திபெற்றவர். அவர் அருந்தியவை எல்லாம் அச் சைவ மடத்தின் ஞான போனகம். அணிந்தவை எல்லாம் அம் மடாலயத்துப் புண்ணியத்தின் வெண்ணிறத்தையே காட்டும் மாணபரணம். அவரது மூச்செல்லாம் பஞ்சாக்கர மூச்சும் தமிழ் மூச்சும் ஆம். அவை யாவும் கருத்துருவங்களாய்ப் பல நூல் வடிவங்களில் ஆராய்ச்சி விளக்கம் அமைந்து, தமிழ் வழங்கும் மக்களுடைய ஆயிரக்கணக்கான வீடுகளையும் பற்பல நூலகங்களையும் அழகுசெய்கின்றன. இக்காலத் தங்கமணிகள், மேடையில் பாராட்டிப் பேசும் சங்கத் தமிழ் முழுதும், மறைந்த மாநகரில் புதைந்து கிடந்த மாணிக்கங்கள். அவற்றை முதன் முதலில் எடுத்துக்காட்டியவர்கள் ஐயர் அவர்களே. செந்தமிழ்ப் பசிக்குச் சிறந்த உணவாகும் சிறிய பிரபந்தங்களையும், பெரிய நூல்களையும், சங்க இலக்கியங்களையும், இலக்கணம் முதலிய பிறவற்றையும் ஆராய்ந்து வெளியிட்டார்கள். கைம்மாறு இல்லாத கடப்பாடாகத் தமிழ்த்தாய்க்குச்செய்த தொண்டுகளை எண்ணித் தமிழுலகம் இவ்விழாவைச் செய்வது மிகப் பெரிதும் பாராட்டத்தக்கது.

புகழுடலில் விளங்கும் ஐயர் அவர்கள் மாணாக்கராய் இப்பொழுது திகழ்வோருள், 'கலைமகள்' ஆசிரியர்—செந்தமிழ்ச் செல்வர் – வாகீசகலாநிதி, ஸ்ரீ கி. வா. ஜகந்நாத ஐயர் M.A., அவர்களும், சென்னைக் கிறித்துவ கலாசாலைத் தமிழாசிரியர் ஸ்ரீ வி. மு. சுப்பிரமணிய ஐயர் M.A., அவர்களும், சிதம்பரம் உலகமூர்த்தி மடம் குருக்களையாவும், பச்சையப்பன் உயர் பள்ளித் தலைமைத் தமிழாசிரியருமான வித்துவான், திருவாளர், சிவப்பிரகாச தேசிகர் அவர்களும் இங்குக் குறிக்கத்தக்கவர்கள். வாழ்க துறைசையாதீனம். விளங்குக மகாவித்துவான் பிள்ளை அவர்களது பெருமை. வளர்க ஐயர் புகழும் தொண்டுகளும். விளங்குக விழாவை நடத்தும் அன்பர்கள். செழிக்க அவர் பேரனார் கால்வழி. வாழ்க தமிழ். வாழ்க உலகம்.



# நால்வர் கண்ட மெய்ப்பொருள்

திரு. கே. இராமலிங்கம் அவர்கள் எம். ஏ,
மாற்றும் முதல்வர், ஆதீனக் கீழைக்கலைக் கல்லூரி.

" எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."

அறிவின் வளர்ச்சி என்பது மெய்ப்பொருள் எது என்பதைக் கண்டறியும் முயற்சியேயாகும். அம்முயற்சியால் இன்று நாம் காணும் முடிவையே உண்மை அறிவு என்று முடிபு செய்கிறோம். அம்முடிபு இன்றைக்கு நம் ஆராய்ச்சிக்கு எட்டிய பொருளைக்கொண்டு செய்யும் முடிபாகும். நாளை வேறு சில புதுப்பொருள்கள் அவ் ஆராய்ச்சிக்கு உட்படுமாயின் நாளை வேறு முடிபுக்கு வரவேண்டியவர்களாகின்றோம். அம் முடிபே உண்மை அறிவு என்றும் நாளை நமக்குத் தோன்றும். அம்முடிபைப் பார்க்கும்போது, இன்று நாம் 'உண்மை அறிவு' என்று கொண்ட முடிபு 'அறியாமை' என்று ஒதுக்கப்பட வேண்டியதாகும். இதுபற்றியே வள்ளுவர் அறிதோறும் அறியாமை காண்கின்றோம் என்று கூறுகின்றார்.

இன்றுகண்ட அறிவு நாளைகாணும் அறிவினால் அறியாமை ஆகிவிடுவதுபோல, நாளைகாணும் அறிவும், நாளைமறுநாள் காணும் அறிவினால் அறியாமை ஆகிவிடும் இயல்பினதாகும் என்பது தெரிகிறது. இப்படியே பொருள்களின் உண்மையை அறிய அறிய, அறியாமை விலகிக்கொண்டேவந்து கடைசியாக மேலும் 'அறியாமை' என்று ஒதுக்கப்படாததான தன்மையுள்ள மெய்ப்பொருள் நமக்குக் காட்சியளிக்கும். இந்த மெய்ப்பொருளை ஆராய்ந்து காணும் கலையே மெய்க்கலை (*Philosophy*) யாகும்.

இன்றைய உலகில் அறிவு எனப் பெரும்பாலோரால் போற்றப்படுவது அறிவியல் ஆராய்ச்சியில் காணும் அறிவே யாகும். அறிவியலைச் 'சிறந்த ஞானம்' என்று பொருள் படுகிற சொல்லாகிய 'விஞ்ஞானம்' என்ற சொல்லால் நாம்

குறிக்கின்றோம்! அதனை அங்ஙனம் நாம் குறிப்பதிலிருந்தே அந்த அறிவியலால் ஏற்படும் ஞானத்தை இக்காலத்தில் எப்படி நாம் போற்றுகிறோம் என்று தெரிகிறது. உலகம் மண், தண்ணீர், காற்று, நெருப்பு, வெளி இவ்வைந்தினாலும், இந்த ஐந்து முதல்களின் பல வேறுபட்ட சேர்க்கையாலும், ஆக்கப் பெற்றிருக்கிறது என்பதறிந்து, அவற்றின் இயல்புகளை ஆராய்வதே அறிவியல் ஆராய்ச்சியாகும்.

அந்த ஆராய்ச்சியின் பயனே மேல்நாடுகளில் பல உன்னற்கரிய வாழ்க்கை வசதிகளாகவும், போர்க்கருவிகளாகவும் உருவெடுத்திருக்கிறது. இந்த அறிவியல் ஆராய்ச்சி வளர வளர, நேற்றைய ஆராய்ச்சியில் உண்மையெனக்கண்டது இன்றைய ஆராய்ச்சியில் பொய்யென ஆகிவிடுவது தெரிந்திருந்தும், இவ்வறிவியலால் காண்பதே 'மெய்யான அறிவு' என்று கொள்ளும் முடிபு எவ்வளவு அறியாமையாகும் என்று சொல்லவேண்டுவதில்லை. மேலும், அறிவினால் தனக்கும் உலகுக்கும் நன்மை விளையவேண்டுமேயன்றி, அழிக்கும் போர்களும் கெடுக்கும் வாணிகமும் விளையுமா என்று சிந்திக்கவேண்டும்.

ஐம்பூதங்களின் நிலைகளையும், தன்மைகளையும், இயக்கங்களையும், ஆராய்கின்ற மனிதனுக்கு அவற்றை எல்லாம் படைத்து, அவற்றை ஆராயும் ஆற்றலையும் அவனுக்கு அளித்து, அருளாடல் புரிந்துவரும் பெரும் பொருள் ஒன்று உண்டு என்ற உணர்வு வராமல் இருப்பது பெருவியப்பாகத்தான் இருக்கின்றது. அணுவின் இயக்கத்தையும், அண்டங்களின் சுழற்சியையும், ஆராய ஆராயக் கட்டாயம் இவற்றிற்கெல்லாம் முதலான ஒப்பற்றதொரு மெய்ப்பொருள் இருந்தாகவேண்டும் என்ற எண்ணம் மனிதனுக்கு வந்து வாய்க்காமற் போகாது. இவ்வாய்ப்பு கைகூடும்நாள் எந்நாளோ என்று ஏங்கவேண்டியிருக்கிறது.

உலகத்திலுள்ள நாடுகளின் பண்டைய வரலாறுகளைப் படிக்கும்பொழுது, இந்த ஐம்பூத ஆராய்ச்சியில் ஆங்காங்கு உள்ள மக்கள் ஈடுபட்டதோடு நின்றுவிடாமல், இந்த ஐம்பூதங்களின் ஊடே உருவிச்சென்று அவற்றிற்கெல்லாம் மூலமான முதற்பொருளைக் காண்பதிலே நாட்டம் உடையவர்களாக இருந்தார்கள் என்று அறிகின்றோம். பண்டைக்காலத்திலே



மேல்நாட்டில் பிளாட்டோ, அரிஸ்டாடல் முதலியவர்களுடைய அறிவு ஆராய்ச்சி, மெய்ப்பொருள்காணும்நெறியிலே சென்றது. இன்றைக்கு அறிவியல் முடிபே உண்மை முடிபு என்று அறுதியிட்டுக் கூறும் மக்களிடையிலேயும், அவ்வறிவியல் ஆராய்ச்சியையும் கடந்து நிற்கும் மெய்ப்பொருளைச் சுட்டும் எண்ணம் இல்லாமல் இல்லை. மெய்ப்பொருள் நாட்டத்தோடேயே செய்யும் ஆராய்ச்சிகளைப்பற்றிய மெய்ந்நூல்களும் மற்ற நாடுகளிலே அச்சிடப்பெற்று, நம்மையும் அத்துறையிலே ஊக்குவிக்கும் தகைமையுடையனவாய் இங்கு வந்து உலவி விளங்குகின்றன.

நம் நாட்டிலோ எக்காலத்திலுமே மெய்ப்பொருளைக் காணும் ஆராய்ச்சி பல பேரறிஞர்களால் செய்யப்பெற்று வந்திருக்கின்றது. சைவ மெய்க்கலையாளர்கள் கண்ட முடிபை 'சைவ சித்தாந்தம்' என்ற பெயரால் குறிப்பிடுகின்றார்கள். அம்முடிபின்படி உடையான், உயிர்கள், உலகம் என்ற மூன்று பொருள்கள் என்றும் உள்ள பொருள்கள். இவற்றைப் பதி, பசு, பாசம் என்பார்கள். உயிர்கள் அநாதியே ஆணவம் என்ற அறியாமையால் கட்டுண்டு கிடக்கின்றன. அவை ஆண்டவனைப்போல அறிவு உடையனவாயினும் இவ்வாணவத்தால் கட்டுண்ணப்பெற்றதால் அவ்வறிவு விளங்கப்பெறாமல் கிடக்கின்றன.

இறைவன் பேரருளாளன் ஆனதால் உயிர்களுடைய இந்தக் கட்டுண்ட நிலைமைக்கு இரக்கங்கொள்கிறான். உலகத்தின் வித்தாக என்றுமுள்ள மூலமாயை அல்லது மூலப்ருகிருதியிலிருந்து, மயக்கும் தன்மை உடையதால் மாயை என்று அழைக்கப்பெறும், தனு கரண புவன போகங்களாகும் உடல், கருவிகள், உலகம், நுகர்ச்சி என்பவற்றை உயிர்களுக்கு அளிக்கின்றான். உயிர்கள் வினை செய்யுமாறும் பண்ணுகிறான். அழுக்காடையின் அழுக்கைப்போக்கச் சாணியையும், உவர் மண்ணையும் ஆடையுடன் சேர்ப்பதுபோல, உயிர்களின் அறியாமையைப் போக்கடிக்க மாயையையும் வினையையும் கூட்டுகிறான். உயிரைப்போன்ற அறிவுப் பொருளாதலின் உயிரோடு ஒன்றாக, அதனோடு இருந்து அதனை இயக்கி வருவதால் அதற்கு உடனாக, இன்ப உடைமையாலும், பற்பல இயல்புகளாலும் உயிரினின்றும் வேறுபடுவதால் அதைக்காட்டிலும் வேறாக இறைவன் இருந்து துணைபுரிகிறான்.

அறியாமை தேயத்தேய அறிவு விளங்கிவரலும், தன் தலைவனை உணர்ந்துகொள்ளும் ஆற்றல் உயிருக்கு வந்துவிடுகிறது. மாயை தன்னை மயக்கி இடர்செய்துவரும் இயல்பையும் வினை தன்னை மீளாப் பிறவிச் சுழலில் வீழ்த்தும் தன்மையையும் உணர்ந்து வருந்துகிறது. இறைவனே இம்மாயையினின்றும், வினைச் சழக்கினின்றும், தன்னை மீட்கவல்லான் என்றும் உணர்ந்து அவனருளுக்கு ஏங்குகிறது. இது பக்குவப்பட்ட நிலை என்று அறிந்து அவன் அருள்புரிகிறான். மாயை மயக்குவது நிற்கிறது. வினை சுட்டவித்தாய்விடுகிறது. உயிர் வீடுபெற்று இன்பவடிவினனான அவனோடு இரண்டறக்கலந்து பேரின்பத்தில் நிலைத்துவிடுகிறது. சைவ சமயாசாரியர்களாகிய திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திகள், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் கண்ட முடிபு இதுவே.

இனி இந்த சைவ சமயாசாரியர்கள் அவர்களுடைய செந்தமிழ்ப் பாடல்களிலே அவர்கண்ட மெய்ப்பொருளை எப்படி எடுத்து ஓதி, விளக்குகின்றார்கள் என்று பார்க்கலாம். கடவுள் இவ்வுலகப் பொருள்கள் யாவற்றிலும் தங்கி நின்று அவற்றிற்கப்பாலுமாய் விளங்கிநிற்கும் நிலைமையை மாணிக்கவாசகப் பெருமான் மனங்கனிந்து பாடுகின்றார். எங்ஙனம் நான் வாழ்த்துவேன் என்று இடர்ப்படுகின்றார்:

"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யான்எனது என்று அவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே."

அப்பரம்பொருள் வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி இருந்தாலும் வான், மண், காற்று, ஒளி, நீர் இவை எல்லாம் ஒடுங்கிச் செல்கின்ற காலத்தேயும், அப்பரம்பொருள் அழியாது நிற்குந் தன்மையுடையது என்ற பெருங்கருத்தை, "வான்கெட்டு மாருதம் மாய்ந்து அழல் நீர் மண் கெடினும் தான் கெட்டலின்றிச் சலிப்பு அறியாத் தன்மையன்" என்று பாடுகின்றார். அப்பரம்பொருளுக்கு ஊன்கெட்டு, உயிர்கெட்டு, உணர்வு கெட்டு, உள்ளமும்போய், தான் கெட்டநிலைமைதான் அடைய வேண்டுமென்று வேண்டிக்கொள்கிறார்,

எல்லாமாயிருக்கின்ற பரம்பொருள் பேரருள் உடையதாய் உயிர்களை ஆட்கொள்ளும் பெருநோக்கமுடையதாய் விளங்குகின்றது என்ற கருத்தை,



"பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியேனுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம் புறம் திரிந்த
செல்வமே சிவபெரு மானே!
யான் உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந்து அருளுவது இனியே?"

என்று மாணிக்கவாசகர் இப்பாட்டால் வெளியிடுகின்றார். ஒருவருக்குத் தன்னைக்காட்டிலும் இனியவர் உலகத்தில்வேறொருவரும் இல்லை. ஆனால் இறைவன் தன்னிலும் இனிமையானவன் என்று அப்பர் சுவாமிகள் பாடுவதைப் பாருங்கள்;

"என்னில் யாரும் எனக்கு இனியார் இல்லை
என்னிலும் இனியான் ஒருவன் உளன்
என்னுளே உயிர்ப்பாய்ப் புறம் போந்து புக்கு
என்னுளே நிற்கும் இன்னம்பர் ஈசனே."

இவ்வளவு இனியவனான இறைவனை அடையாமல் எப்படிப் பிரிந்திருப்பேன் என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடுகிறார்;

"ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான்செய்யும் துரிசுகளுக்கு உடனாகி
மாழை ஒண்கண் பரவையைத் தந்து ஆண்டானை மதியில்லா
ஏழையேன் பிரிந்து இருக்கேன் என் ஆரூர் இறைவனையே."

பரம்பொருளின் பெருங்கருணையை நினைந்து பசுவினிடம் கன்று உருகுவதுபோல உருகவேண்டும் என்று வேண்டுகின்றார் மாணிக்கவாசகர்.

"உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்
குற்றாலத்து அமர்ந்துஉறையும் கூத்தா உன்குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்து உருக வேண்டுவனே."

சுந்தரமூர்த்திசுவாமிகள் "வழுக்கி வீழினும் நின் திருப்பெயரல்லால் மற்று நான் அறியேன் மறுமாற்றம்" என்கிறார்.

பேரருளாளனான பரமனை அணுகவொட்டாது தடுப்பன ஆணவமாகிய 'பேர் இடும்பை' என்றும், 'பழவினைப் பற்று' என்றும் பாடுகிறார்கள் இச்சமயாசாரியர்கள்.

"பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்றறியேன்" என்கின்றார் மாணிக்கவாசகர்.

"அவ்வினைக்கு இவ்வினையாம் என்று சொல்லும் அஃதறிவீர்
உய்வினை நாடாதிருப்பதும் உந் தமக்கு ஊனமன்றே
கைவினை செய்து எம்பிரான் கழல்போற்றுதும் நாம்அடியோம்
செய்வினை வந்து எமைத் தீண்டப்பெறு திருநீலகண்டம்"

என்று பாடுகின்றார் திருஞானசம்பந்தர்.

வெவ்வினையை வேரறுத்து உலக மாயையில் சிக்காது விலகி, ஆணவ இருளை அடியோடு போக்கி அருளவல்ல ஆண்டவனிடம் தனது உடல், பொருள், ஆவி முழுதையும் ஒப்புவிப்பதே சமயாசாரியர்களது முடிவான வழி. "எல்லாம் உன் உடைமையே, எல்லாம் உன் அடிமையே, எல்லாம் உன்னுடைய செயலே" என்று உணரவேண்டும்.

"அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும், குன்றே யனையாய் என்னை ஆட் கொண்டபோதே கொண்டிலையோ" .... .... .... "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" "வேண்டி யென்னைப் பணி கொண்டாய் வேண்டி நீ யாது அருள் செய்தாய் யானும் அதுவே வேண்டின் அல்லால், வேண்டும் பரிசொன்று உண்டென்னின் அதுவும் உன்தன் விருப்பன்றே"

என்கின்றார் மாணிக்கவாசகர்.

இங்ஙனமாக அநாதியே ஆணவத்தால் கட்டுண்டு கிடந்த உயிர்களுக்குப் பேரிரக்கத்தால் இறைவன் தனு, கரண, புவன, போகங்களைத் தந்து அறியாமையைத் தேய்த்ததும், பக்குவமானதும், வினையை அடியோடறுத்து, உயிர்களைத் தன்வசமாக்கிக் கொள்ளுகிறான். உயிர்கள் அறியாமை கழலப்பெற கழலப்பெற, ஒரு தனித் தலைவனை கடவுளை உணர்ந்து அவனேயன்றி வேறொரு பொருளில் நாட்டமில்லாமல் அவனிடமே அடைக்கலம் புகுந்து உய்கின்றன. அவனை அறிதற்கு அவனருளே துணையாகின்றது. அவனருள்முன் உலக மாயையும், வாழ்க்கைத் துயரமும், வினையின் தொல்லையும், செயலற்று விலகிவிடுகின்றன.

சமயாசாரியர்களுடைய செந்தமிழ் அருட்பாடல்களிலே எங்கெங்கும் பொதிந்து கிடக்கும் கருத்துக்களே இவையாகும். அவர்கண்ட மெய்ப்பொருள் நாம் கண்டு உய்வதுஎக்காலம்?



# இராமாயணத்தில் சிவ பரத்துவம்

**சிரோமணி, திரு. இராஜகோபால சாஸ்திரிகள் அவர்கள்**
வடமொழிப்பேராசிரியர், பல்கலைக்கல்லூரி, தருமபுரம்.

இராமன் என்ற சொல் காதில் விழுந்தவுடன் தந்தையின் சொல்லைத் தலைமேல் தாங்கிப் பதினான்கு வருஷம் வனவாசம் செய்த இராஜகுமாரனே கண்ணெதிரில் நிற்கின்றான். ஏனைப் பலராமனோ பரசுராமனோ தோற்றமளிப்பதில்லை. அதுபோலவே இராமாயணம் என்று அடைமொழியின்றிக் கூறப்படுமாயின்,

वेदवेद्ये परे पुंसि जाते दशरथात्मजे ।
वेदः प्राचेतसादासीत्साक्षाद्रामायणात्मना ॥

"மறைகளாலுணர்ந்தோதற்கரிய பரமபுருஷன் தசரதகுமாரனாகியபொழுது வேதம் வால்மீகி முனிவரின் வாயினின்றும் இராமாயணரூபமாய்வந்தது" இவ்வாறு புகழப்பட்ட வால்மீகியின் இராமாயணமே கொள்ளப்படும். பிற இராமாயணங்கள் அத்யாத்மராமாயணம், ஆனந்தராமாயணம், வாஸிஷ்டராமாயணம், துளஸீதாஸ் ராமாயணம், கம்பராமாயணம் முதலியன அடைமொழிகொண்டே உணர்த்தப்படுகின்றன. அவற்றிற்கு இதுவே முதல் நூல், ஆதிகாவியம், உத்தமகாவியம். இது முதல்நூல் என்பதுபற்றி யாரும் மாற்றம் கொண்டனரில்லை.

தமஸாநதியில் நீராடச்சென்ற முனிவர் அங்கு வேடனொருவனால் ஆண் பறவையடித்து வீழ்த்தப்பட்டவுடன் பெண் பறவை அலறுவதைக் கண்டு வருந்திச் சில சொற்கள் கூறினார். அவருடைய சோகம்,

मा निषाद प्रतिष्ठात्वमगमः शाश्वतीः समाः ।
यत्क्रौञ्चमिथुनादेकमवधीः काममोहितम् ॥

"காமலீலையில் மயங்கியிருந்த கிரவுஞ்சபக்ஷிகளின் ஜோடியில் ஒன்றைக் கொன்ற நீ அநேக ஆண்டுகள் நிலைபெற்றிருக்க

மாட்டாய்" என்ற சுலோக ரூபமாய் வெளிவந்தது. அந்தச் சுலோகம் நான்கு அடிகளுடன் ஒத்து இருப்பதைக்கண்டு வியந்த முனிவர், நீராடிச்சென்ற பிறகும் அதை நினைத்திருந்தபொழுது பிரமதேவன்தோன்றி "என்கருத்தின் வண்ணமே தேவலோகத்தில் இருந்த ஸரஸ்வதி உனது நாக்கில் தோன்றினாள். ஆதலால் இதே மாதிரிச் செய்யுட்களால் இராமாயணத்தை நீ செய்" என்று அருளிப்போந்தனன். பிறகு அம் முனிவரால் இயற்றப்பட்டமையின் இராமாயணம் ஆதிகாவியமாகும்.

காவியம் என்ற கண்கொண்டு, இதிகாசம் சமயநூல் என்று நினைக்காமல், இராமாயணத்தில் சிவபரத்துவம் கூறும் கருத்துக்கள் எப்படி உள்ளன என்பதைக் காண்போம். வெளிப்படையாகத் தோன்றும் (வாச்சியமான) பொருளைத் தவிர, உட்பொருளாய் (த்வனி அல்லது வ்யங்க்யம்) சொல்பவரின் கருத்தினை நன்கு தெரிவிப்பதாய்க், கேட்போர் மனத்தை ஆனந்தத்தில் ஆழ்த்துவதாயுள்ள பொருள் மிகுந்திருக்கும் காவியம் உத்தமம் என்பது அலங்காரம் வல்லுநர் கருத்து. ஆதலின் இராமாயணத்தின் த்வனிப்பொருளை ஆராய்வோம்.

1. காட்டில் மனைவி தம்பியுடன் பல இடங்களில் தங்கியிருந்த இராமன் சுமார் பத்து வருஷங்கள் கழித்து அகஸ்த்ய முனிவரைக் காணச்சென்ருன். அங்கு இராமன் இலக்ஷ்மணனை நோக்கி,

अत्र देवाः सगन्धर्वाः सिद्धाश्च परमर्षयः ।
अगस्त्यं नियताहारं सततं पर्युपासते ॥ ஆ. 11-90

"இங்கு, தேவர், கந்தர்வர், சித்தர், ரிஷிகள் யாவரும் அகஸ்த்ய முனிவரை உபாஸிக்கின்றனர்" என்று கூறுகிருன். மேலும் சம்புகனின்,

अगस्त्यस्याश्रमपद द्रष्टुमिच्छाम राघव ... உ. 76-16
काकुत्स्थ तद्गमिष्यामो मुनिं तमभिवन्दितुं ... உ. 76-17

வதத்தினுல் மகிழ்ச்சியடைந்த தேவர்கள் இராமனைத் துதித்து "இராமா அகஸ்த்யரின் ஆச்ரமத்தைப் பார்க்க விரும்புகின்ருேம்; ஆதலால் அம்முனிவரைவணங்கச்சென்றுவருகின்ருேம்" என்று கூறுவதனுலும் தேவர்களால் அகஸ்த்யர் உபாசிக்கப் படுகிருர் என்பது புலப்படும். மேலும் பிர்மா சுவேதன் என்ற அரசனை நோக்கி,



स हि तारयितुं सौम्य शक्तः सुरगणानपि ।
किं पुनस्त्वां महाबाहो क्षुत्पिपासावशं गतम् ॥ உ. 78-19

"அழகியவனே அவர் தேவர்கூட்டங்களையும் கடைத்தேற்ற சக்தியுடையவர், பசிதாகத்தின் வசப்பட்ட உன்னைக் கரையேற்றுவார் என்பது சொல்லவேண்டுவதோ" என்று கூறுவதும் முனிவரின் பெருமையை உணர்த்தும். முனிவரின் ஆசிரமத்தில் நுழைந்த இராமன்,

स तत्र ब्रह्मणः स्थानं धर्मस्थानं च पश्यति । ஆ. 12-17

பிர்மா, அக்நி, விஷ்ணு, குபேரன் முதலிய உபாஸகர்கள் இருக்குமிடங்களைக் காண்கிருன். இங்கு, சிவன் முனிவரை உபாசிக்கவந்ததாகவோ, அல்லது அவருக்கு இடமோ கூறப்படவில்லை. ஒரு முனிவரைத் தேவர்கள் உபாசனை செய்வது அவருடைய பெருமையை நோக்கி இருக்கமுடியாது. அவரால் உபாசிக்கப்படும் தெய்வத்தின் பெருமை பற்றியதேயாகும். என்னே அடியார்களின் பெருமை. அகஸ்த்யர் சிவபெருமானை உபாசிப்பவர் என்பது வெளிப்படையானது. இதனுல் சகல தேவர்க்கும் சிவபெருமான் உயர்ந்தவர் என்பது உட்கருத்தாய் விளங்கிற்று.

2. லவணுசுரனைக் கொல்ல நாராயணுஸ்திரத்தை இராமன் சத்ருக்கினனுக்குக் கொடுக்கிருன். அது பிரயோகிக்கப்பட்டபோது தேவர் பயந்து பிரமனிடம் ஓடினர். மதுகைடபர்களைக் கொல்லுவதற்காக நாராயணரூபமான அஸ்திரம் மிக்க பலம் உடையது என்றுகூறி, பிரமன் அதன் பெருமையை விளக்கினுன். இராமனும்,

नायं मया शरः पूर्वं रावणस्य वधार्थिना । உ. 63-23

இராவணவதகாலத்தில்கூட இதை நான் உபயோகிக்கவில்லை என்று பெருமையாகக்கூறி “यच्च तस्य मयच्छूलं” “சிவபெருமானால் கொடுக்கப்பட்ட அவனுடைய பெரிய சூலம்” கையில் இல்லாதபொழுது கொல்லமுடியுமேயன்றி அச் சூலம் கையில் இருந்தால் வெல்லமுடியாது என்றும் கூறுகிறான். சிவபெருமானின் சூலத்தின் ஓர் அம்சமான சூலத்திற்கேஇவ்வளவுபெருமை கூறும் இராமன் சிவபெருமானை எப்படி நினைக்கிறான் என்று கூறவேண்டுவதில்லை.

“श्रीमतः शितिकण्ठस्य कृत्यं हि दुरतिक्रमम्” உ 63-30

காலகண்டனுடைய செய்கை மீற முடியாதது என்று அங்கே கூறுவதும் கவனிக்கத்தக்கது.

3. இலங்கையிலிருந்து புஷ்பக விமானத்தில் இராமன் சீதையுடன் திரும்பிவரும்பொழுது, தான் அவள்காரணமாகச் செய்தவைகளைக் கூறிக்கொண்டே வருகிறான்;

अत्र पूर्वं महादेवः प्रसादमकरोद्विभुः

“இங்குச் சிவபெருமான் அருள்செய்தார்” என்று சமுத்திரக் கரையைக் காட்டுகின்றான். இராமன் சிவபெருமானின் அருள் பெற்றான் என்பதும் சிவனின் பெருமை உணர்த்துவதாகும். இராமன் சிவனை உபாசித்ததாக யுத்தகாண்டத்தில் அணைகட்டுமிடத்தில் இராமாயணத்தில் சொல்லப்படவில்லை எனினும், காகாசுரனுடைய வரலாறு, சீதைக்கு இராவணன் வீட்டில் இருக்கும்பொழுது இந்திரன் பாயஸம் அனுப்பியது, முனிகுமாரனைக்கொன்றதால் தசரதனுக்குச் சாபம் ஏற்பட்டது முதலியன தேவையுள்ள இடத்தில் கூறப்படுவனபோல், “இராமன் சிவனை உபாசித்தான்” என்று பிறகு கூறப்படுவது பொருத்தமுடையதேயாகும்.

4. இராவணசம்ஹாரம் ஆனதும் தேவர்யாவரும் வந்து வரமளித்தனர். பிர்மா,

तदिदं नः कृतं कृत्यं त्वया धर्मभृतां वर ।
निहतो रावणो नाम प्रहृष्टो दिवमाक्रम ॥ யு. 120-27



“தர்மசிரேஷ்டனே, எங்கள் காரியம் நிறைவேறிற்று. இராவணன் கொல்லப்பட்டான். நீ சொர்க்கம் செல்” என்று சொன்னார்.

प्राप्य राज्यमयोध्यायां सान्त्वयित्वा सुहृज्जनम् ।
इष्ट्वा तुरगमेधेन प्राप्य चानुत्तमं यशः ॥
ब्राह्मणेभ्यो धनं दत्वा त्रिदिवं गन्तुमर्हसि । யு. 120

“அயோத்தியில் இராஜ்யத்தையடைந்து நண்பர்களைச் சமாதானப்படுத்தி அசுவமேத யாகம் செய்து மேலான புகழ் பெற்று அந்தணர்களுக்குப் பொருள் கொடுத்துப் பிறகு சுவர்க்கம் செல்லத் தக்கவன்” என்று சிவபெருமான் சொன்னவைகளையே ஏற்றுக்கொண்டு நடந்ததும் கூர்ந்து கவனிக்கத்தக்கது.

5. இராவணனோடு போரிடும் காலத்தில் களைத்த இராமனுக்கு அகஸ்த்யமாமுனிவர் ஆதித்யஹ்ருதயம் உபதேசிக்கவும் இராமன் அதை ஜபித்து இராவணனை வென்றான். ஆதித்யஹ்ருதயத்தில்,

ब्रह्मेशानाच्युतेशाय सूर्यायादित्यवर्चसे ।
भास्वते सर्वभक्षाय रौद्राय वपुषे नमः ॥ யு. 107

“பிர்மவிஷ்ணுருத்திரர்களுக்கும் ஈசனாய், சூரிய ஒளியுற்றவனாய் எல்லாவற்றையும் உண்டாக்கும் காந்தி பொருந்திய சர்வசம்ஹாரமூர்த்தியான சிவபெருமானுக்கு வணக்கம்” என்பது முதலியவற்றால் சிவபரத்வம் நன்கு விளங்கும்.

6. இராமன் “எந்த யாகம் செய்யலாம்” என்று ஆலோசிக்கும்பொழுது பரதன் கூறிய இராஜஸூயத்தை மறுத்து இலக்ஷ்மணன் “இந்திரன் அசுவமேதம் செய்து விஷ்ணுவைப் பூசித்து பயன்பெற்றபடியால்” நாமும் அசுவமேதம் செய்யலாம் என்று கூறினான். இராமன் इष्ट्वा तुरगमेधेन “அசுவமேத யாகம் செய்து” என்ற சிவபெருமானின் வாக்கியத்தை நினைத்து அந்த யாகத்தைச் செய்ய உடன்பட்டான் எனினும், அவ்வேள்வியினால் ஆராதிக்கத்தக்கவன் சிவபிரான்

என்பதை இலராஜனின் சரித்திரத்தின்மூலமாகத் தெரிவிக்கின்முன்.

नान्यं पश्यामि भैषज्यमन्तरेण वृषध्वजम् ।

"விடைக்கொடியோனையன்றி வேறு மருந்தினை யான் காணவில்லை" என்றும் கூறுகிருன். இராமனுல் ஏவப்பட்ட யாகம் செய்விப்போர்களும்,

ते तु रामवचः श्रुत्वा नमस्कृत्य वृषध्वजम् ।

"அவர்கள் இராமன் சொல்லேக் கேட்டு, சிவபெருமானே நமஸ்கரித்துச்" செய்வதும் கவனிக்கத்தக்கது. வேள்வியின் முடிவில்,

अथ यज्ञे समाप्ते तु प्रीतः परमया मुदा ।
उमापतिर्द्विजान् सर्वान् ...

"யாகம் முடிந்தவுடன் சந்தோஷமடைந்த சிவபெருமான் மிக்க மகிழ்ச்சியுடன் அந்தணர் யாவரையும்" நோக்கி प्रीतोऽस्मि हयमेधेन "அசுவமேதத்தால் சந்தோஷமடைந்தேன்" என்று கூறுவதும், இராமன் அசுவமேதம் செய்ய உடன்பட்டகாரணத்தைப் புலப்படுத்தும்.

7. இதுவரையில் இராமனுடைய செய்கைகளேக் கவனித்தோம். கவியின் கூற்றையும் கவனிப்போம். உவமேயத்தைக் காட்டிலும் உவமானம் நூறுமடங்கு உயர்ந்தது என்பது கவிகளின் கொள்கை.

"कृताभिषेकः स रराज रामः सीताद्वितीयः सहलक्ष्मणेन ।
कृताभिषेको गिरिराजपुत्र्या रुद्रः सनन्दी भगवानिवेशः ॥

கோதாவரியில் ஸ்நானம் செய்துவிட்டு, சீதையோடும், இலக்ஷ்மணனேடும் கூடிவரும் இராமன், அபிஷேகம் ஆனவுடன் நந்தியோடும், மலேமன்னன் மகளோடும் கூடிய ஈசன்போல் விளங்குகிருன் என்று ஈசனே இராமனுக்கு உவமானமாகக் கூறுகிருர். இதனுல் வால்மீகியின் கருத்தும் புலனுயிற்று.



8. கங்காவதரண படலத்தில் शिवे शिवशिरस्युत मங்களகரமான சிவபெருமானின் தலேயில், என்றும்,

भवाङ्गपतितं तोयं पवित्रमिति पस्पृशुः

சிவனுடலில்பட்ட நீர் தூய்மையானது என்று யாவரும் ஸ்பரிசித்தனர் என்றும், சாபமடைந்தவர் யாவரும் அதில் மூழ்கி நற்கதியடைந்தனர் என்றும் கூறுகிருர்.

9. ஜடாயு, சுக்ரீவன், கபந்தன் முதலியோர் சீதையின் இருப்பிடத்தை நன்கு அறிந்தவர் என்றே புலப்படுகின்றது. அப்படியிருக்க இராமனிடம் அவர்கள் கூருமைக்குக் காரணம் எல்லாம்வல்ல இறைவனின் விருப்பமே என்பதுதான் பொருந்தும். திருமாலின் அவதாரமான இராமனேயும் மனேவியின் பிரிவினுல் ஒரு வருஷகாலம் துன்புறுத்த ஒருவன் விரும்பி அதன்படி நடத்தினுல் அவன் (சிவன்) பரம்பொருள் என்பதற்கு யாதும் ஐயமே இல்லே. இதனுல் இராமாயணத்தின் ஜீவநாடி சிவ பரத்வம் என்பது விளங்கும்.



குறிப்பு:– இக்கட்டுரையை எழுதிய புலவர், வடமொழியில் வல்லவராதலோடு தமிழிலும் சைவநூலாராய்ச்சியிலும் ஸ்ரீமத் இலக்கணத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் முதலிய பெரியோர்களுடன் இருந்து பயின்ற பேரநுபவமும் அதிகஞானமும் உடையவர். இதில் உள்ள பொருட்சிறப்பே அவ்வுண்மையை இனிது உணர்த்தும்.

துணையாசிரியர்.

இலக்கியம்

# குன்றம் பெயர்த்த கோமான்

வித்துவான், திரு. சொ. முத்தையன் அவர்கள்,
தலைமைத் தமிழாசிரியர், T·E·L·C· உயர்நிலைப்பள்ளி, தரங்கம்பாடி.

ஒருநாள் அண்மையில் தருமையாதீன வெளியீடாக வெளி வந்த திருஞானசம்பந்தரது தேவாரம் இரண்டாந் திருமுறையைக்காண நேர்ந்தது. அதனில் திருச்சிக்கற் பதிகத்து எட்டாம் பாடலில் வந்துள்ள "தெற்றலாகிய தென் இலங்கைக்கிறைவன்" என்ற தொடருக்குப் பொருள்கண்ட திரு. முத்து சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள் தெற்றல் என்பதற்கு மாறுபாடு என்று பிறர்கொண்ட பொருள் சரியன்று அதற்கு அறிவில் தெள்ளியவன் என்று பொருள் காணுவதே முறை என்று ஆதாரங்கொண்டு கூறித் தமிழகத்தார்க்கு இராவணன் சிறந்த சிவபக்தன்; அறிவில் தெள்ளியன்; நிறைந்த பக்தியைக் கொண்ட கோமான் என்று நிறுவியிருப்பதைக் கண்டு மகிழ் வுற்றேன்.

என்சிந்தனை உடனே சங்ககாலச்செய்யுட்களை எண்ணியது. மக்கள் உள்ளத்தில் உள்ள சிறந்த கருத்துக்களைக் கொண்டு தெரியாத செய்திகளை விளக்கிப் பாடல்களைத் தரும் ஒப்பற்ற புலவர்களை எண்ணினேன். சீராமகதை, பாரதகதை போன்ற இதிகாசங்கள் அக்கா மக்களிடையே பெருவழக்காயிருந்தன. பாரதம் பாடிய பெருந்தேவனார் என்ற பெயரே அவர் தமிழில் பாரதம் செய்தவர் என்பதைப் புலனாக்குகிறது. அவ்விதிகாசங்களைப் பற்றிய பலகுறிப்புகள் நச்சினார்க்கினியரால் தொல்காப்பியப் புறத்திணையியலின் உரையில்காணக் கிடக்கின்றன. உவமையின் வாயிலாக அரிய கருத்துக்களைத் தெளிவாக வெளியிடலாம் அல்லவா? தெரிந்த ஒன்றன் வாயிலாக அறியாதவற்றை விளக்குவதுதானே முறை! காட்டுப் பசுவை அறியாதவனுக்கு வீட்டுப்பசுவாயிலாக அதனது தோற்றத்தை விளக்குவது எளிதல்லவா? அதேபோல் மக்கள் உள்ளத்து அறிந்திருந்த சீராமகதை வாயிலாகச் சங்ககாலப் புலவர் தாமறிந்த — கண்ட — ஒரு செய்தியைக் 'கற்றறிந்தோர் ஏத்தும்கலி' என்று புகழப்படும் கலித்தொகையில் வெளிப்படுத்துகிறார். இதன் வாயிலாக இராவணன் அக்கால மக்கள் உள்ளத்து அழியா இடம் பெற்றுளான் என்பதை நிறுவும் அப்பொய்யா நாவிற் கபிலர் கருத்தைக் காண்போம்.

அடர்ந்த வனம். நெருங்கிய மரங்கள். செறிந்த இருள். 'மந்தியும் அறியா மரம்பயில் அடுக்கம்' பல்வேறு மரங்களது உயர்ச்சி, பகலினையும் இரவினையும் மாறுபாடு அறியாவாறு செய்துவிட்டன. ஓங்கிவளர்ந்த எண்ணற்ற மரங்களிடையே அழகிய வேங்கைமரம் ஒன்று நீண்டு நெடிது வளர்ந்துளது. அவண் வந்த களிறு ஒன்று அம்மரத்தினைக் கண்டது. தன்னைத் தாக்கவரும் வேங்கை என்று திரிபால் உணர்ந்தது. "பரியது கூர்ங்கோட்டதாயினும் யானை வெரூஉம் புலி தாக்குறின்" என்பது வள்ளுவரது வாக்கு அல்லவா! தாக்கவரும் வேங்கையிடமிருந்து காத்துக் கொள்ள நினைத்த அக்களிறு வெகுண்டு தன் கூரிய தந்தங்களால் அதனது அடியில் தாக்கிற்று. மரத்தில் பதிந்த அக்கொம்புகளை மீண்டும் எடுக்க வொண்ணாது அம்மலைச்சாரல் எல்லாம் கேட்கும்படி பிளிறுகிறது. கானகத்து இயற்கையாய்க் காணக்கூடிய இக்காட்சி கபிலரது கற்பனையில் வரலாறாக முகிழ்க்கிறது. என்னவரலாறு அது?

திருக்கயிலாய மலை. செம்மேனி எம்மான் பொலிவுபெற வீற்றிருக்கிறார். அருகில் பச்சைப் பசுங்கொண்டலாம் பூங்கொடி உமாதேவி அமர்ந்துளாள். திடீரென்று மலை ஆடுகிறது. மலையரையன் பாவை மலைத்துவிடுகிறாள். ஐயிருதலையின் அரக்கர் கோமான் தொடிப்பொலி தடக்கைகளால் வெள்ளியங்கிரியைப் பெயர்க்க முற்படுகிறான். பெருமான் திருவிரலை ஊன்றுகிறார். ஊன்றவே அரக்கன் அஞ்சினான். கரங்களைக் கயிலையின் அடிவிட்டுக் கலங்கினான். இவ்வரலாறு கபிலர் நினைவில் உருப்பெறுவதைக் காண்க.

இமையவில்வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்
உமையமர்ந் துயர்மலை இருந்தன னாக
ஐயிரு தலையின் அரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையிற் கீழ்புகுந் தம்மலை
எடுக்கல் செல்லா துழப்பவன் போல
உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையைக்
கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை

நீடிரு விடரகஞ் சிலம்பக் கூய்த் தன்
கோடுபுய்க்கல்லா துழக்கு நாட! (குறிஞ்சிக்கலி-2)

இவ்வரலாறு கபிலரது சைவப்பற்றை விளக்குகின்றதன்றோ?

இச்செய்தியினைப் பிற்காலப் புலவர்களும் தங்கள் பாடல்களில் வைத்துப்பாடி இன்புறுகிறார்கள். தலைவன் தலைவிக்கிடையே சிறு பிணக்குகள் ஏற்படுவது சகஜந்தானே! ஊடல் தான் தலையாய இன்பம் தருவதாகும். இதையே வள்ளுவர் 'ஊடுதல் காமத்திற்கின்பம் அதற்கின்பம் கூடிமுயங்கப் பெறின்' என்றுகூறுகிறார். உயிர்களிடத்துக் காணும் இவ்வூடலை இறையிடத்தும் காண்கிறார் பழம்பாடல் ஆசிரியர் ஒருவர். அருவி நிரம்பிய கயிலையங்கிரியைப் பெயர்த்தெடுக்கிறான் அரக்கர் தலைவன். மலை கிடுகிடுக்கிறது. நடுக்கத்தினால் பயந்து நடுங்கினாள் தேவி. இதுகாறும் ஊடல் கொண்டிருந்த தேவி அருகிருந்த இறைவனை ஊடல் நீங்கித் தழுவினாள் என்கிறார்.

"அருவியங் குன்றம் அரக்கன் பெயர்ப்ப
வெருவிய வெற்பரையன் பாவை - பெருமான்
அணியாகம் ஆரத் தழுவினாள் தான்முன்
தணியாத ஊடல் தணிந்து"

இதனையே சமாகித அணியென்பர் அணி நூலார். ஞானசம்பந்தரும் ஒவ்வொரு பதிகத்திலும் மறவாது சிறந்த சிவபக்தனை ஐயிருதலையரக்கர் கோமான் செய்தியைப் பாடியுள்ளார். ஆகவே இதுகாறும் கூறியவற்றால் தென்னிலங்கைக் கிறைவன் சிறந்த பக்தன் என்பதும், தெள்ளிய அறிவுடையன் என்பதும், குன்றம் பெயர்க்குமளவுக்கு வலிமை பெற்றிருந்தான் என்பதும் அக்காலமக்கள் உள்ளத்தில் அழியா இடம்பெற்று இருந்தான் என்பதும் போன்ற செய்திகளை நம்முன்னோர் வழங்கியுள்ளனர் என்பது தெளிவாகிறதன்றோ!

இத்துணையும், தருமையாதீனத்தால் தமிழ் நாட்டுக்குக் கிடைத்த இரண்டாம் திருமுறையின் வளமான குறிப்புரைப் பகுதியால் எளியேனுக்கெழுந்த சிந்தனைகள். குன்றைப் பெயர்த்த கோமானைப் பற்றிய சிந்தனையை எளியேனுக்கு எழுப்பிய தருமைத் திருமடம் தழைக! அதன் தொண்டுகள் பரவுக! என்று எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகிறேன்.

---

**வடமொழிக் கருவூலத்தின் பிற்சேர்ப்பு**

# பூலோக விமர்சனம்

**(பதினேழாம் நூற்றாண்டு வேங்கடாத்வரி)**

தமிழில் ஆக்கியவர்

**பிர்மஸ்ரீ. ய மஹாலிங்க சாஸ்திரிகள் அவர்கள் M. A., B. L.,**
தருமபுர ஆதீனக் கல்லூரித் தலைவர்.

(முன்தொடர்ச்சி)

விசுவாவசு ஸ்ரீமந்நாராயணனை ஸ்துதிசெய்ததைப் பொறுக்காத க்ருசானு பின்வருமாறு ஆக்ஷேபித்தான்.

நீ நாராயணனை ஸ்துதிசெய்வது எனக்குப் பிடிக்கவில்லை. ஜகத்தைச் சிருஷ்டிப்பதும் அழிப்பதும் அவன் தொழில். ஒரு பைத்தியக்காரன்கூடத் தோட்டத்தை ஏற்படுத்திவிட்டுப் பின் அழிப்பானா?

மேலும் அந்தர்யாமியாக இருந்துகொண்டு நல்லது கெட்டது எல்லாவற்றிலும் பிராணிகளைத் தூண்டுதல் செய்பவன் மறுபடி பாபம் செய்தவர்களை நரகத்தில்போட்டு வதைக்கிறான். கட்டளையை மீறினவர்களைத் தண்டிப்பது அரசனின் தொழில். அப்படியல்லாமல் பாபத்திற்கும் தானே துணை இருந்துவிட்டுத் தானே தண்டிக்கவும் தண்டிக்கிறான் என்றால் இது ஈவு இரக்கமற்ற தன்மையை அல்லவா காண்பிக்கிறது?

விசுவாவசு இந்த ஆக்ஷேபத்திற்குச் சமாதானம் சொல்லுகிறான். பெருங் கருணைக் கடல் ஆன பகவானைக்கூட நீ தூஷிக்கிறாய். பிராணிகளின் சுகதுக்கங்கள் அவரவர்களின் கர்மாவை அனுசரித்து வருகின்றன. நிலா வெளிச்சத்தில் ஒருவன் திருடுகிறான் என்றால் அந்தக்காரியம் நிலாவின் பிரேரணையால் நடக்கிறதா? ஈச்வரன் ஸர்வஸாக்ஷி. ஸ்ருஷ்டி ஸ்திதி பிரளயம் இயற்கையின் தர்மம், அவைகளை நடத்துபவன் நாராயணன். உன் அறியாமையினால் அவர்பேரில் குறை கூறுகிறாய். இந்த

ஸம்ஸாரஸாகரத்தில் மூழ்கி மூழ்கித் தத்தளிக்கும் மாணவர்களுக்கு அபயமளித்து, தயாநிதியான நாராயணன் எவ்வளவு ஆன்மாக்களைத் தன் திருவடியில் சேர்த்துக்கொண்டிருக்கின்றார். முன்னொருகாலத்தில் கஜேந்திரனை முதலையிடமிருந்து காப்பாற்ற அவர் ஓடிவரவில்லையா? பிரஹ்லாதனை ரக்ஷிக்கத் தூணிலிருந்து நரஸிம்மனாக ஆவிர்பவிக்கவில்லையா? திரௌபதி அலறினபோது அவளுக்கு ஆடைதந்து ஆதரிக்கவில்லையா? இங்ஙனம் எவ்வளவோ பக்தர்களுக்குப் பகவான் கிருபைசெய்ய இல்லையா? ராமாவதாரத்தில் சரணமடைந்த ஒரு காக்கைக்கும் உயிரை அளித்தார். ஒரு கழுகுக்கும் உயர்ந்த லோகங்களுக்குச் செல்ல அனுமதிதந்தார். ஒரு வேடனையும் தன் நண்பனாகக் கொண்டார். ஒரு குரங்குக்கும் ஒரு அரக்கனுக்கும்கூட ராஜ்ய தானம் செய்தார். ஸ்ரீமந்நாராயணனை அறிவில்லாதவர்கள் தான் குறைகூறுவார்கள். அவர் கருணாநிதி. ஜீவர்களுக்கு மனுஷ்யசரீரத்தைக் கொடுத்து நல்லகதியை அடைய வழி தேடுங்கள் என்று அவர் கருணையுடன் கட்டளையிடுகிறார். நல்ல கர்மாக்களைச்செய்து ஸ்வர்க்கம் மோக்ஷம் இவைகளை அடையக் கூடிய ஸாதனம் இந்த மானிட சரீரம். இதில் நாம் அனுபவிக்கும் கஷ்டங்கள் நம்முடைய முன் ஜன்மத்தின் துஷ்கர்மாக்களின் பலன். அதை அறியாமல் நாராயணனை நிந்திப்பதில் என்ன பிரயோஜனம்? நம் கர்மபலனை நாம் அனுபவிப்பதற்கு நாராயணன் என்னசெய்வான்? பாமரஜனங்கள் தன் குற்றம் குறைகளை ஈசுவரனிடத்தில் சுமத்தப்பார்க்கின்றார்கள். எந்தச் சரீரத்தைக்கொண்டு ஸம்ஸாரக்கிலேசங்களைக் கடக்கவேண்டுமோ அந்தச் சரீரத்தைக்கொண்டு மேலும் துஷ்கர்மாக்களைச் செய்து கஷ்டங்களை மூடர்கள் சம்பாதித்துக்கொள்கிறார்கள். சத்ருவை ஜயிக்கும் பொருட்டுக் கொடுக்கப்பட்ட கத்தியால் ஒருவன் தன்னையே காயப்படுத்திக்கொண்டால் அது யாருடைய தப்பு?

பகவான் சாஸ்திரங்களை மஹான்களைக்கொண்டு செய்வித்திருக்கிறார். அவைகளின்மூலம் தன் ஸ்வரூபத்தை ஜனங்கள் அறியட்டும் என்ற கருணையுடன் அந்த சாஸ்திரங்களின்மூலம் நாம் உண்மை அறிவைப் பெற முயலுதல்வேண்டும். இந்தச் சரீரத்தைக்கொண்டு ஈச்வரஸேவை செய்யவேண்டும். அதற்காகத்தான் இந்தச் சரீரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. மனஸ் ஈச்வரத்யானத்திற்காகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதை வீண் கவலைகளிலும் சபலங்களிலும் செலுத்திப் பாழ்படுத்துகிறோம். லோகத்தில் கோயில்கள் குளங்கள் நதிகள் தீர்த்தங்கள் முதலியன ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவைகளின் மூலம் தூய்மையை (சுத்தியை)த் தேடிக்கொள்ளவேண்டியது நம்கடமை. அவ்வப்போது பகவான் உயரிய ஆசாரியர்களை அனுப்பிவைத்து ஜனங்களுக்கு நல்லவைகெட்டவைகளை எடுத்து உபதேசிக்கச்செய்கிறார். இந்தக் குருக்களிடம் நல்லுரைகளைக் கேட்டு நாம் உய்வதற்கு வழிதேடிக்கொள்ளவேண்டும். நமக்குப் பகவான் தயையினால் இவ்வளவு உபகாரங்கள் செய்துவரும் போது நாம் நல்லகதி அடையப் போதிய முயற்சி எடுத்துக் கொள்ளாமல் ஸம்ஸாரமாகிற பயங்கரமான காட்டிலேயே சுற்றிக்கொண்டு கஷ்டங்களை அனுபவிப்போமானால் அது யாருடைய தப்பு? அதற்குமேல் பகவான்தான் என்னசெய்வார்?





---

# தேவாரம் வைத்தியம் செய்யுமா?

சிவக்கவிமணி, திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் B.A.,
சேக்கிழார் நிலயம், கோயம்புத்தூர்.

இந்தக் கேள்வி அனேகம்பேர் கேட்கிறார்கள். சிலர் குறும்புத்தனமாகவும் கேட்கிறார்கள். யார் எப்படிக்கேட்டாலும் தேவாரம் வைத்தியம் செய்யும். அதற்கு மேலும் செய்யும் என்று உறுதியாய் விடை சொல்வதற்கு என் மனம் துணிகின்றது. வைத்தியம் என்றால் சாதாரணமாக மக்களுக்கு உடம்பைப்பற்றிய நோய்களுக்குச் செய்யும் மருத்துவம் பற்றியே பொருள்கொள்வார்கள். மக்களுக்கு உயிர் என்றும் உடம்பு என்றும் இரண்டு உடைமைகள் உண்டு. ஏன்? மக்களுக்கு மட்டுமா? எல்லாச் சீவராசிகளுக்கும் தான். உடம்புக்கு மட்டுமே அன்றி உயிருக்கும் நோய் உண்டு. இரண்டற்கும் வைத்தியம் செய்தல் வேண்டும். உடம்பே உயிரைப் பற்றிய நோய் தான். தேவாரங்களால் உயிர் ஈடேறும் என்பது பெரியோர்கண்ட உண்மை. அதைப்பற்றி இங்கே பேச வரவில்லை. உடம்பின் நோய் தீர்க்கும் மருத்துவம் பற்றித்தான் சில கருத்துக்களைத் தெரிவிப்பது இதன் நோக்கம்.

தேவாரம் அருளிய மூன்று பரம ஆசாரியன்மார்கள் சரித்திரங்களிலும் அவர்களின் தேவாரங்களின் அருளிய பாட்டினால் மக்கள் பற்பல நோய்களினின்றும் நீங்கப்பெற்ற வரலாறுகள் கேட்கப்படுகின்றன.

அப்பர்பெருமான் "ஒன்றுகொலாம்" என்ற பதிகத்தால் திங்களூரில் அப்பூதி நாயனாரின் மகனை அரவின்விடம் நீக்கி அருள்புரிந்தனர். திருஞானசம்பந்த நாயனார் திருமருகலில் அரவுதீண்டிவீந்த வணிகனைச் "சடையாய் எனுமால்" என்ற பதிகம் பாடியருளி விடம்தீர்த்ததனோடு திருமணமும் புணர்வித்தருளினார். திருப்பாச்சிலாச்சிராமத்தில் கொல்லிமழவன் மகளைப் பீடித்திருந்த முயலகனோயைத் "துணிவளர் திங்கள்" என்ற பதிகத்தால் தீர்த்தருளினார். "மந்திரமாவது நீறு" என்ற திருப்பதிகத்தினாலே மதுரையில் கூன்பாண்டியரது



வெப்புநோயினைத் தீர்த்தருளினார். கொங்குநாட்டில் திருக்கொடிமாடச்செங்குன்றூரில் திருச்செங்கோடு நாடு முழுதும் பரவித் துன்புறுத்திய குளிர்சுரத்தை "அவ்வினைக் கிவ்வினை" என்ற பதிகமருளிச்செய்து நாடுமுழுதும் அப்பிணியை நீக்கி அருளினார். ஆளுடையநம்பிகள் திருவாரூரில் "மீளா அடிமை" என்ற திருப்பதிகம் பாடிக் கண்பெற்றார். இன்னும் இவ்வாறு எத்தனையோ வரலாறுகள் உண்டு. திருஞானசம்பந்தநாயனார் திருமயிலாப்பூரில் எலும்பைப் பெண்ணாக்கிய செய்தியும் ஆளுடையநம்பிகள் திரு அவிநாசியில் முதலைவாயின் பிள்ளை அழைத்த செய்தியும் போன்றன மிகப் பெரிய அற்புதங்கள். அவற்றைப்பற்றி இங்குப் பேசவில்லை. உடம்பு உள்ளபோதே வந்த நோய்களைத் தீர்த்தல் பற்றியே இங்குப் பேசுவோம். "ஆம்! இவை பழைய புராணக் கதைகள். இவற்றையெல்லாம் யார் நம்புவார்கள்" என்று உடனே குதித்தெழும்பும்; ஈரோட்டுப்பள்ளிக்கூடக் குட்டித் தம்பிகள். தம்பி! அவசரப்பட வேண்டாம். இந்தப் புராணங்கள் உனது நம்பிக்கைக்காக எதிர்பார்த்துக்கொண்டிருக்கவில்லை. நீ நம்புவதும் நம்பாததும் பற்றிக் கவலையுமில்லை. உண்மை தெரியவேண்டுமென்னும் ஆவல் உண்மையாக உனக்கிருக்குமாகில் கறுப்புக்கண்ணாடி போட்டுக் கண்ணை மறைத்துக்கொள்ளாமல் உற்றுப்பார். உண்மை விளங்கும். இந்தச் சரித்திரங்களும் பாடல்களும் உண்மைதான். ஆகையினால் காலத்தினால் மயங்கிப்போகாத தன்மையுடையவை. நிகழ்ந்த அன்றைக்குச்செய்த வேலைகளை இன்றைக்கும் ஏற்றபெற்றியில்செய்தே வருகின்றன. இந்தப் பதிகங்களைப் பயின்றும் பயிற்றியும் அனுபவத்திற்பலனடைந்த பலருடைய செய்தியை நான் அறிவேன். பயின்ற அவ்வப்பலன்களை நானும் என் அனுபவத்தில் அறிந்திருக்கிறேன். எதிலும் நம்பிக்கையில்லாது தடுமாறுகின்ற நீயும் அனுபவத்திற் கண்டு உண்மைகாணலாம். நீங்கள் எல்லாரும் சுகமாய் இருங்கள். உலகம் எல்லாம் துன்பம் நீங்கி இன்பமடையட்டும் என்பதே சைவர்கள் பிரார்த்தனை. ஆனால் காலகதியினால் உங்களில் யாருக்காவது விஷம்தீண்டியோ சுரம் முதலிய நோய் வந்தோ கண்மறைந்தோ சங்கடப்படக்கூடிய சம்பவம் நேர்ந்துவிட்டால் அப்போது இந்தக் கருத்துக்களைச் சிந்தனைசெய்து பரீட்சை செய்து பார்த்தால் உண்மை உனக்கும் விளங்கும். நீயும் அனுபவத்தில் நன்மையடைவாய். உனது தீமொழிகளால்

நாட்டினரைக் கெடுக்காமல் நாட்டவருக்கும் நன்மைசெய்வாய். என்றிவ்வாறு இவர்களுக்கு எடுத்துச் சொல்ல என் மனம் விரும்புகின்றது.

முன் சரித்திர உண்மைகளும் அனுபவங்களும் ஒருபுறமிருக்க இப்போது கண்கூடாகப் பார்க்கக்கூடியதொரு செய்தியை இங்கே எழுதினால் பயன்தரும் என்று எழுதத் துணிகின்றேன்.

சேலம், திரு. சுப்பிரமணியபிள்ளை என்று ஒரு பெரியார் இருக்கிறார். அவருக்கு இப்போது வயது எண்பத்துநான்கு. அவர் தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள் ஏறக் குறைய எல்லாவற்றையும் யாத்திரை சென்று வழிபட்டிருக்கின்றார். அவர்போகாத தலங்கள் மிகச் சிலவே. சில பதிகளுக்குப் பல முறையும் போய் வழிபட்டிருக்கிறார். அவருக்கு மனைவிமக்கள் இல்லை. அவரது தம்பிமக்களார் சைதாப்பேட்டையில் இருக்கிறார்கள். தமக்கு உள்ள கொஞ்சம் ஐவேஜ்களையும் அவர்கள் வசமாக்கிவிட்டார்.

இத்தகைய பெரியவருக்குத் தீவினைக் கதியால் ஒரு விபத்து ஏற்பட்டுக் கீழே விழுந்துவிட நேர்ந்தது. இடுப்பிலும் கால்களிலும் பலத்த ஊறுகள். எலும்புகள் பிசகிப் பிளந்துவிட்டன. இராயப்பேட்டை மருத்துவச்சாலை (ஆஸ்பத்திரி)யில் பலமாதங்கள் படுத்திருந்து சிகிச்சைசெய்யப்பட்டார். வயதாய் விட்டபடியால் இது குணமாகாதென்று கைவிடப்பட்டுச் சைதாப்பேட்டை சேர்ந்தார், படுத்தபடுக்கைதான். பிறருதவியால் எல்லா அவசியங்களும் நிறைவேறவேண்டியிருந்தநிலை. சிவசிந்தனைமறவாத செம்மை மரபின் ஒழுக்கமுடையாராதலின் அவருக்குத் தேவாரத்தில் உத்தரவு கேட்கவேண்டும் என்ற நினைவு வந்தது. அப்படியே தேவாரத்திருமுறையில் கயிறு சார்த்தி உத்தரவுகேட்டார். உத்தரவும் கிடைத்தது. திருஞானசம்பந்த நாயனாரது பண் - சாதாரி - திருமாகறல் தேவாரம் உதயமாயிற்று. அதில் முதற் பாசுரம் "மாகறலுளான்...... அடிசேர்பவர்கள் நீவினைகள் தீருமுடனே" என்பதாம். அந்தப் பதிகத்தினுள் ஏனைத்திருப்பாடல்களிலும் "ஏத்தவினை அகலுமிகவே", "வினை பறையுமுடனே", "அடியாரை நலியா வினைகளே", "அடிசேர்பவரை அஞ்சி யடையா வினைகள் அகலுமிகவே", "ஏத்த வினை நிற்றலில போகுமுடனே",



"ஆய புகழேத்து மடியார்கள்வினை யாயினவு மகல்வதெளிதே", "அடியாரை அடையா வினைகளே" என்று பயன் கூறுகின்றமை இப்பதிகத்தின் சிறப்பாகும். "தொல்வினைகள் நல்குமுடனே" என்று பதிகப்பயனும் அருளப்பெற்றிருக்கின்றது காண்க.

உத்தரவு கேட்பது என்பதுபற்றி இங்கே சில செய்திகள் பேசவேண்டியது அவசியம். தம்முடைய அறிவுக்குள் எட்டாமலும் ஆனாலும் ஒருவகையாற்றுணியப்பெறவேண்டியும் உள்ள விஷயங்களில் துணிவுபெற நேரிடும்போது, வாய்ச்சொற் கேட்டல், சுவாமிசந்நிதியில் பூவைத்துக் கேட்டல், பல்லிசொற் கேட்டல், சகுனம்பார்த்தல் முதலிய முறைகளைக் கையாண்டு துணிவுபெறுதல் நமதுநாட்டில் பழையவழக்கமாகும். இவற்றுட் சிறந்தது தேவாரம் முதலியவற்றுள் கயிறுசார்த்திப் பார்த்து உத்தரவுகேட்பதாகும். இதனை முதலில் வழிகாட்டியமூர்த்தி சைவசமயாசாரியர் பெருமானாகிய திருஞானசம்பந்தநாயனாரே யாவர், அதனை வழிநடந்து காட்டியவர் சைவசந்தானாசாரியராகிய அருணந்திதேவரேயாவர். மதுரையில் பாண்டியர் சபைமுன் சமணரோடு அனல்வாதம்செய்ய நேர்ந்தபோது திருஞானசம்பந்தநாயனார் தமது தேவாரத்திருமுறையைத் தமது திருக்கையினாலே மறித்து உத்தரவு கேட்டருளினார். அப்போது "போகமார்த்த பூண்முலையாள்" என்ற திருநள்ளாற்றுப் பதிகம் உதயமாயிற்று. அந்த ஏட்டினைக் கழற்றி அத்தலத்தினைத் துதித்துப் பதிகம் பாடி வணங்கி, அந்த ஏட்டினையே தீயில் இட அதுவேகாது பச்சையாய் விளங்கிற்று.

மகப்பேறு இல்லாத குறைபற்றிப் பலநாள் மிக வருந்தித் தம் சீடர் அச்சுதகளப்பாளர் தம்மிடம் விண்ணப்பித்தபோது குலகுருவாகிய அருணந்திசிவாசாரியார் தேவாரத்திருமுறையில் கயிறுசார்த்தி உத்தரவுகேட்டார். "பேயடையா பிறிவெய்தும் பிள்ளையினோடுள்ளநினை வாயினவே வரம்பெறுவர்" என்ற திருஞானசம்பந்தப் பெருமானது திருவெண்காட்டுத் திருப்பதிகம் உதயமாயிற்று.

அவ்வழியே அவர்பணித்தபடி அச்சுதகளப்பாளர் திருவெண்காட்டிற்குச் சென்று தவங்கிடந்ததன்பயனாக ஞானசூரியனாகிய மெய்கண்டதேவநாயனாரைப் பிள்ளையாகப்பெற்றனர். பெறவே இம்மரபு சைவசம்பிரதாயத்தில் தொன்றுதொட்டுவரும் வழக்க

மாகும். பின்னுல் வந்தவர்கள் தேவாரத்திற்பெறும் உத்தரவுகளைப் பொருள்செய்து ஏற்றவாறு பயன்படுத்திக்கொள்ளும் பக்குவமும் ஆற்றலும் குறையவே பெரியபுராணத்திற் கயிறு சார்த்தும் வழக்கமும், அந்தப்பக்குவமும் குறையவே திருவிளையாடற்புராணத்தில் உத்தரவு கேட்கும் வழக்கமும் போந்தன. இதுவும் இந்நாளில் குறைந்துவருதல் வருந்தத்தக்கது. சிவபெருமானையே முழுமுதற் பரம்பொருளாகத் துணிந்த பொருளைத் தம் அகத்துட்கொண்டிருத்தலாலே இந்தச் சுவடிகளையே சிவபெருமாளுகவும் அந்தச் சுவடிகளைக் கயிறுசார்த்தித் திறந்த இடத்துக் கிடைக்கும் பாடல்களையே அவரது உத்தரவாகவும் பாவித்துக் கொள்ளுதல் மரபு.

"செங்கண் ஏற்றவ ரேபொரு ளென்று தாம் தெரித்த
பொங்கி சைத்திருப் பதிகநன் முறையினைப் போற்றி
எங்கள் நாதனே பரம்பொரு ளெனத்தொழு தெடுத்தே
அங்கை யான்முடி மிசைக்கொண்டு காப்புநாண் அவிழ்த்தார்."

—திருஞானசம்பந்தநாயனுர் புராணம். 781.

"சாற்று மெய்ப்பொருள் தருந்திரு முறையினைத் தாமே
நீற்று வண்கையால் மறித்தலும் வந்து நேர்ந்துளதால்
நாற்ற டம்புயத் தண்ணலார் மருவுநள் ளாறு
போற்றும் அப்பதிகம் போக மார்த்தபூண் முலையாள்."

—திருஞானசம்பந்தநாயனுர் புராணம். 782.

என்ற இதன் தத்துவத்தையும் மரபினையும் நன்கு விரித்தருளினுர் ஆசிரியர் சேக்கிழார்பெருமான். சுவடியை மறித்துக்கண்ட இடத்தே முதற்பக்கத்தினிறுதிப்பாட்டும் அடுத்தபக்கத்தின் முதற்பாட்டும் உத்தரவாகக்கொள்வது பெரும்பாலும் மரபு. "கேட்டால் கொடுக்கப்படும்" (*Ask and it Shall be Given*) என்று கிறித்தவநூலும் கூறுகிறது.

இனி, இவ்வாறு திருமாகறல் தேவாரம் உத்தரவாகப் பெற்ற சுப்பராயபிள்ளை, திருமாகறலுக்குப் போய்வந்து தமது வாழ்நாளை ஒப்படைப்பது என்று தீர்மானித்துவிட்டார். அப்போது அவரது உடல்நிலையானது தரையில் கைகளை ஊன்றி ஆசனத்தால் நகர்ந்துசெல்வதற்குத்தான் இயலுமாகியிருந்தது. தமக்கு மாதம் முப்பதுரூபாய் செலவுக்கு அனுப்பும்படி தம் உறவினரிடம் கேட்டு இசைவுபெற்றுக்கொண்டு திருமாகறல் வந்துசேர்ந்தார். நகர்ந்துசென்று கோயில் திருவா



யிலில் கிடப்பதற்குத்தான் அவரால் முடிந்தது. இப்போது சிலமாதங்களாகின்றன. அவ்வூரில் ஒரு சிறு வீடு குடிக் கூலிக்கு வாங்கிக்கொண்டு அதில் குடியிருந்துகொண்டு திருக்கோயிலில் நாடோறும் வழிபட்டுவருகிருர். தமது உணவைத் தானே சமைத்துக்கொள்கிருர். எழுந்து நடந்து நிலமுற விழுந்து வணங்க அவரால் இயல்கிறது. அவ்வூரார் அவரைச் சாமியார் என்று அழைக்கிருர்கள். ஆனல், அவருக்கு வெளிப்பட்ட சிவன் திருவருளை நேரேகண்டும் அவ்வூரார் கோயிலுக்குப் போய் வழிபட முன்வருபவரில்லை. அவ்வூருக்குத் தம் அலுவலாகத் தணிக்கைக்கு சென்ற சென்னை இந்துமத அறநிலையத் தலைவராகிய (*Commissioner H. R. E. & C. dept.*) திருவாளர். *T. K.* சங்கரவடிவேல் பிள்ளை *B.A., B.L.*, அவர்கள் அங்கு அவரை நேரில் கண்டு விசாரித்தபோது அவர்மூலமாகவே இவ்வரலாறுகளை அறிந்து மகிழ்ந்தனர். அவநம்பிக்கையும் உலோகாயதமுமே பெருகி வரும் இந்நாளில் வெளிப்படும் திருவருள் விளக்கத்தை வியந்து பாராட்டினர். அடியேனிடமும் சொல்லி மகிழ்ந்தார். இதைப் பலருக்கும் எடுத்துச்சொல்லிவருகிருர். இதனைக்கேட்ட அவரதுமைத்துனர் திருவாளர். *T. S.* விசுவநாதபிள்ளை *B.A.*, அவர்கள் வியந்து சிவனருள் வெளிப்பட இடமாயிருந்த அவ்வடியாரைத் தரிசித்து வணங்கவேண்டுமென்று யாத்திரையாகச் சென்னையிலிருந்து புறப்பட்டுத் திருமாகறலுக்குப்போய் அவரைக்கண்டு வணங்கி அவரால் உபசரிப்பும் பெற்று, திருக்கோயிலை வழிபட்டுவந்தார். அவரும் எனக்கு இச்செய்திகளைச் சொல்லத் தெரிந்தேன்.

திருமாகறல் என்பது தொண்டைநன்னுட்டில் ஏழாவதுபதி. காஞ்சிபுரத்திலிருந்து தென்கிழக்கில் பத்துநாழிகையளவில் சேயாற்றின் வடகரையில் உள்ளது. உத்தரமேரூர்போகும் மோட்டார்பஸ்வசதி உண்டு. சுவாமிபெயர் அடைக்கலங்காத்த நாதர் என்பது. விரும்பும் அன்பர்கள் சென்ருல் இன்றைக்கும் அந்த அருள் விளக்கம் பெற்ற அன்பரையும் அருள்கொடுத்த ஆண்டவரையும் கண்டும் வழிபட்டும் நலம்பெறலாம். "இம்மையேதருஞ் சோறுங் கூறையும் ஏத்தலாம் இடர் கெடலுமாம், அம்மையே சிவலோக மாள்வதற்கியாதும் ஐயுறவில்லையே" என்பது ஆளுடையநம்பிகளது அருளாணைத் திருவாக்கு. ஆகையால் தேவாரம் வைத்தியம் செய்யுமா? என்றவினுவுக்குச் செய்யும் என்றே விடைகூற முற்படுகின்றேன்.

# மானிட மடங்கல்

**வித்துவான், திரு. மு. இரத்தின தேசிகர் அவர்கள்**
தலைமைத் தமிழாசிரியர், நாட்டாண்மைக் கழக உயர்நிலைப்பள்ளி,
திருவாரூர்.

இரணியன் தேவராலும், மக்களாலும், விலங்குகளாலும், பறவைகளாலும் சாவா வரத்தைப்பெற்றான். அரண்மனையின் உள்ளேயும், வெளியேயும், இரவிலும், பகலிலும், பகைவர்கள் தன்னை அழிக்கமுடியாத நிலையையும் அவன் வேண்டிப் பெற்றான். எந்த ஆயுதமும் தன் ஆவியைப் போக்கக் கூடாது என்பது அவன் பெற்ற வரம்.

இந்த நிலையிலே சேற்றில் பங்கயம் தோன்றுவதுபோல அவனுக்கு பிரகலாதன் மகனாய்ப் பிறக்கின்றான். நாத்திகம் பேசும் தந்தையை ஆத்திக நெறியில் திருப்ப அரும்பாடு படுகின்றான். "குழந்தாய்! நீ கூறும் இறைவன் எங்கு இருக்கின்றான்" என்ற வினா தந்தையினிடம் தோன்றுகிறது. தனயன் "யான் கூறும் இறைவன் எங்கும் இருக்கின்றான். இங்குள்ள இக்கம்பத்தும் இருக்கின்றான்" என்ற விடையைத் தருகின்றான். தந்தைக்குப் பொங்கியெழும்புகின்றது கோபம். ஏ! பேதாய்! இக்கம்பத்தினிடத்தே நீ சொன்ன இறைவனைக் காட்டுவாயாயின் அவனையும் கொன்று உன் செம்பொத்த குருதியைத் தேக்கி நின்னையும் செகுப்பேன்" என்று சினந்து கூறி, அக்கம்பத்தைத் தாக்குகிறான் தந்தை. எழும்புகிறது ஒரு பெரிய உருவம்! அஞ்சத்தக்க உருவம்! வரபலங்களைக் கடந்த உருவம்! அதுதான் மானிட மடங்கல். ஆவேசநிலையிலே இரண்யனை அழித்து ஆத்திகத்தை நிலைநாட்டிற்று அவ்வுருவம்.

திருமாலின் பத்துப் பிறவிகளில் இம்மானிட மடங்கல் பிறவியுமொன்று. இதுவே நரசிம்ம அவதாரம் எனவும் வழங்கப்பெறுகிறது. மக்கள் உருவும், சிம்மத் தலையும் கொண்டது அவ்வுருவம். இந்தத் தோற்றத்திற்கு முன்பு திருமால் மீன், ஆமை, பன்றி என்ற தோற்றங்களை எடுத்ததாக புராணங்கள் கூறும். இம்மானிட மடங்கல் தோற்றத்திற்குப் பின் திருமால் மனித வடிவத்தை எடுத்தார். ஆனால் அந்த மனித வடிவம் முழுவளர்ச்சி அடைந்ததல்ல. இதன் பின்னரே பரசுராமன், ரகுராமன், பலராமன், கண்ணன்



என்ற முழுவளர்ச்சியும், முழு ஆற்றலும் அமைந்த மனித வடிவங்களைப் பெற்றார் என்று சொல்லப்படுகின்றது. மேல் நாட்டு விஞ்ஞானிகளிலே, டார்வின், ஹெக்கல்ஸ் போன்ற அறிஞர்கள் உயிர் நூல்களை நம்பிக்கை வாதத்திற்கு இடமின்றி நேரிற் கண்ட நிகழ்ச்சிகளால் வரைந்து சென்றிருக்கிறார்கள் என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். அவர்கள் கருத்துப்படி சிறு உயிர் பெரு உயிராக வளர்ந்து பரிணமிக்கின்றது என்று நம்பப்படுகிறது.

இருவேறு வகைப்பட்ட உடற் கூறுகளமைந்த இம் மானிட மடங்கலை இலக்கண நூலாரும் ஏற்ற இடங்களில் உவமையாக எடுத்தாண்டிருக்கும் திறம் வியத்தற்குரியதாகும். எழுத்தின் வைப்பு முறையைப்பற்றி உரை எழுதிவந்த நன்னூல் விருத்தி ஆசிரியர், "எகரமாவது அகரக் கூறும் இகரக் கூறும் தன்னோடு ஒத்திசைத்து நரமடங்கல்போல் நிற்ப தோன்றாகலானும், ஒகரமாவது அகரக் கூறும் உகரக் கூறும் தம்மோடு ஒத்திசைத்து அவ்வாறு நிற்பதோன்றாகலானும், அவற்றின் பின் முறையே வைக்கப்பட்டன" என்று கூறியிருப்பது சிந்திப்பதற்குரியதாகும்.

இம்மானிட மடங்கலைப் பற்றிய சிந்தனை சோலை சூழ்ந்த ஆரூரை வந்தடைந்த குமரகுருபரரது உள்ளத்தே படிந்து நிற்கின்றது. அதே சமயத்தில் அவரது உள்ளம் ஆரூரையடுத்த இயற்கைக் காட்சிகளில் ஈடுபடுகின்றது. ஒளிமிக்க கிரணங்களைப் பரப்பும் செங்கதிர்ச் செல்வனாகிய சூரியன், வேண்டிய மட்டும் தன் வெயிலை வாரி வழங்குகின்றான். ஆனால் மேகங்கள் படிந்துள்ள பூக்கள் நிரம்பிய குளிர்ந்த சோலைகள் தமது அடர்த்தியால் அச்சூரிய ஒளியைத் தடுத்து விடுகின்றன. சோலையின் உள்ளிடமெல்லாம் செறிந்த இருள் ஒரே பிண்டமாகக் காட்சியளிக்கின்றது. இக்காட்சியில் திளைக்கும் அடிகளாரது எண்ண அலைகள்,

"ஒண்கதிர் பரப்பும் செங்கதிர்க் கடவுள்
வெயில்கண் டறியா வீங்கிருள் பிழம்பில்
புயல்கண் படுக்கும் பூந்தண் பொதும்பில்"

என்ற பாவடிகளாக வெளிவருகின்றன. அச்சோலையில் காவலர்களுக்கு அஞ்சிய மந்தி ஒன்று ஒருமரத்தின் அடியே ஒளிந்துகொண்டு வீற்றிருப்பதை குமரகுருபரர் காண்கின்றார்.

அம்மந்தி மயிரடர்ந்த தன்கழுத்தோடு சிங்கத்திற்கு ஒத்த முகத் தோற்றத்தினையும் மனித உடலிற்கு இணையான உடலமைப் பையும் கொண்டு கரிய விரல்களோடு ஒரு வடிவாய்த் திகழ்வ தைக் காண்கிறுர்கள். கண்ட அடிகளாரது திருவாக்கினின்றும்,

"காவலர்ப் பயந்து பாதவத் தொதுங்கிய
இருவே றுருவில் கருவிரல் மந்தி"

என்ற அடிகள் தோன்றுகின்றன. மந்தி என்னசெய்கின்றது? பொன்னிறமாகப் பழுத்த இனிய சுளைகளையுடைய பலாப்பழ மொன்றை அம்மந்தி தன் மடியில் வைத்துக்கொண்டது. பழங் கிடைத்த ஆனந்தத்தில் மந்தி நாணல்முனை போன்ற தன் பற்களையெல்லாம் வெளியே காட்டி நகைக்கின்றது. கூரிய தன் நகங்களைக் கொண்டு சக்கைகளால் தொடுக்கப்பட்ட பலாச் சுளைகளை ஒவ்வொன்ருக எடுத்து வாயிலிட்டு உண்கின்றது. இத்தோற்றத்தினை அடிகள்,

"பொன்னிறம் பழுத்த பூஞ்சுளை வருக்கை
முன்னுறக் காண்டலும் முளையெயி றிலங்க
மடித்தலத்திருத்தி வகிர்ந்து வள் ளுகிரால்
தொடுத்த பொற்சுளைபல எடுத்து வாய்மடுப்பது"

என்ற அடிகளாய்ப் பாடியருளுகிருர்கள். இவ் இயற்கை நிகழ்ச்சி அடிகளுக்கு மானிட மடங்கலின் வீரச்செயலை நினைப் பூட்டுகின்றது. மந்தி ஒதுங்கியமரம் அடிகளுக்குத் தூணுகத் தோன்றுகின்றது. மந்தி மானிட மடங்கலாகக் காட்சியளிக் கின்றது. மந்தியின் மடியிலிருந்த பொன்னிறப் பலா இரணியம் என்ற பெயரைக்கொண்ட அரக்கனை நினைப்பூட்டுகின்றது. எடுக்கப்படும் ஒவ்வொரு சுளையும், அவனது மார்பைப் பிளந்து குடரோடு பின்னிக்கிடக்கும் நிணத் துண்டங்கள் எடுக்கப் படுவதை நினைப்பூட்டுகின்றது. இத்தகைய வியப்பைத்தரும் காட்சிகளையமைத்து,

"மானிட மடங்கல் தூணிடைத் தோன்றி
ஆடகப் பெயரின் அவுணன் மார்பிடந்து
நீடு பைங்குடரின் நிணங்கவர்ந் துண்டென
இறும்பூது பயக்கும்"

என்ற அடிகளைப் பாடியருளுகிருர்கள். இவ்வடிகள் திருவாரூர் நான்மணிமாலைப் பாடலாய்த் திகழ்கின்றது. மேற்கூறிய பாடல் பகுதிகளை இணைத்துக் காண்க.

அறிவியல்

# அறிவியலும் வாழ்வும்

திரு. ந. சம்பந்தம் B.A., (Hons) அவர்கள்
தமிழ் விரிவுரையாளர், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

சென்ற இதழ்த் தொடர்ச்சி:-

நம் பண்டையர் கணிதத்தில் நிறைந்த அறிவுள்ளவர்கள். ஒரு ஆண்டில் ஏற்படவிருக்கின்ற சந்திர சூரிய கிரகணங்களை முன்னரே கணக்கிட்டுக் கண்டார்கள். வாழ்க்கையின் வருங் காலத்தை ஓரளவு முன்கூட்டியே அறிந்தார்கள். கட்டிடக் கலையிலும் வல்லுனர்கள். அவர்கள் எடுத்துள்ள கோயில்கள் பலநூற்றுண்டுகளாகியும் சிதைவின்றியுள்ளன. இடியில் மின்சாரமிருப்பதை யறிந்தே செப்புக்கலசங்களாகிய இடி தாங்கிகளைக் கோயில்களின் உச்சிகளில் அமைத்தார்கள். சாய்ந்த தளத்தின் (Inclined plane) வழியாக பெரிய எடை யுள்ளவைகளை அதிக உயரத்திற்கு எளிதாக எடுத்துச் செல்ல லாமென்று அறிந்திருந்தார்கள். தஞ்சை இராச இராசேச்சுரக் கோயிலின் உச்சியிலுள்ள 80 டன் நிறையுள்ள ஒரே கல்லை சாரப்பள்ளம் என்ற ஊரிலிருந்து சாரமமைத்து எடுத்துச் சென்றனர் என்று கூறுவர். நெம்பு கோலின் தத்துவத்தை அறிந்திருந்தனர். ஒவ்வொரு பொருளின் இறுதிக் கூறு அணு வாகுமென்று பல ஆயிர ஆண்டுகட்கு முன்னரே அறிந்திருந் தனர். உடல்கள்தான் அழிந்து படுகின்றனவென்றும் உயிர்கள் அழிந்துபடுவதில்லையென்றும் அறிந்து "மன்னுயிர்" என்றே குறித்தனர்.

மக்கள் எந்த இலட்சியத்திற்காகத் தங்கள் வாழ்க்கையை நடத்துகிருர்களோ அவ்விலட்சியத்தைப் பெரும்பாலும் அடைவர். நம் முன்னோர்கள் சடப்பொருள் ஆராய்ச்சியினைத் துச்சமாகக் கருதி அருள் ஒளிபெற அரும்பாடுபட்டார்கள். அவ்வகையில் ஒரு அணுகுண்டையுடைத்து மீண்டும் அதை ஒன்றுசேர்க்கின்ற உச்சநிலையை யடைந்தார்கள். உயிராகிய அணுவில் பதி, பசு, பாசம் என்ற பெருஞ்சக்திகள் அடங்கியிருப்பதை யறிந்து அதை உடைத்துப் பாசத்தை

நீக்கி மீண்டும் பசுவைப் பதியோடு சேர்த்துப் பேரின்பம் பெற்றனர். இவ்வணுகுண்டுக்கு வயது பல நூற்றாண்டுகளாகும். இது மக்கள் இனத்திற்கு இன்பந்தருவதாகும். மேல் நாட்டவர்கள் சடப்பொருள் ஆராய்ச்சியில் உழைத்து உழைத்து இறுதியில் அவர்களும் அணுகுண்டைக் கண்டுபிடித்தார்கள், இவ்வணுகுண்டிற்கு வயது சிறிதேறக்குறைய பத்து ஆண்டுகளாகும், இவ்வணுகுண்டு பெரும்பாலும் மக்களையொழித்தற்கே பயன்படுகின்றது,

நம் முன்னோர்கள் சடப்பொருள் ஆராய்ச்சியால் பெரும் பயனில்லை யென்று அதில் விருப்பங் கொள்ளாதிருந்ததாலும். ஆங்கிலேயர் ஆட்சி நம்மைக் கட்டுப்படுத்தியதாலும் விஞ்ஞான ஆராய்ச்சியில் நாம் பெரும் பங்கு கொள்ளாமலிருந்தோம். ஆனால் பிற பகுதிகளில் அறிவு வளராத காலத்திலே பேரறிவு படைத்திருந்த தொல் குடியில் வந்த நமக்கு விஞ்ஞான ஆராய்ச்சி கடினமானதல்ல, கருவிலே திருவும் விஞ்ஞானத்திலே பெரும் பட்டங்களும் பெற்றுள்ளவர்கள் தங்கள் வாழ்க்கைகளை மேல்நாட்டவரைப்போல அர்ப்பணிக்க வேண்டும். கருவிலே நிறைந்த திருவுடையார் ஒருவர் விஞ்ஞானத்திலே முதல் வகுப்பு M. Sc. (M. Sc.) பட்டம்பெற்றுவிட்டால் அரசாங்க அலுவலில் சேர்வதற்காக ஐ. ஏ. எஸ். (I. A. S) தேர்விலும் முதலிடம் பெற்று ரெவின்யூ டிவிஷனல் அதிகாரியாகச் சேர்ந்துவிட்ட பிறகு அவருடைய விஞ்ஞான அறிவு பயனடையாமல் போகின்றது. மத்தியதரக் குடும்பத்தான் ஒருவன் முதல்வகுப்பு எம். எஸ். ஸி. பட்டம்பெற்ற பின் ஆராய்ச்சி நடத்த அவனுடைய பொருளாதாரம் இடம் கொடுக்காது. அவன் ஏதாவதொரு வேலையில் உடனடியாக சேரவேண்டியுள்ளது, ஆனால் கருவிலே நிறைந்த திருவுடைய முதல் எம். எஸ்ஸி பட்டம் பெற்றவர் தாங்களே முதல் போட்டு விஞ்ஞான ஆராய்ச்சிக் கருவிகள் வாங்கி ஆராய்ச்சி நடத்தியோ அல்லது மேல்நாடுகளுக்குச் சென்றோ விஞ்ஞானத்தில் பேரறிஞர் (டாக்டர்) பட்டம்பெற்று வந்தாலோ அவர்கட்கு திங்களுக்கு ரூபாய் 800 ஊதியம் தருகின்ற சர்வகலாசாலையில் விஞ்ஞானப் பேராசிரியராகச் சேர்ந்துவிடுகிறார். இவ்வாறு ஊதியமே வாழ்க்கையின் இலட்சியமாக வாழ்ந்த பேராசிரியர்கள் பலர் வாழ்ந்து மண்ணோடு மண்ணாகியுள்ளார்கள். ஆனால் விஞ்ஞானத்தில் பேரறிஞர் பட்டம்



பெற்றவர் தம் வீட்டிலேயே விஞ்ஞான ஆராய்ச்சி நடத்திப் புதிய பொருள் ஒன்றைக் கண்டு வெளியிட்டிருந்தாலும் அவருடைய பெயர் விஞ்ஞானப் புத்தகங்களிலே என்றும் மங்காமல் திகழும் என்பது கண்கூடு.

உலகில் எப்பகுதியில் எவனொருவன் செய்தற்கரிய ஒன்றைச் செய்தாலும் அவ்வகையில் முயன்றால் மக்கள் இனமே அச்செயலைச் செய்யக்கூடும் என்பது பொதுக்கொள்கை. (General theory) ஆதலால் தொல்லறிவு படைத்த தமிழ் அன்பர்கள் தங்களைத் தூற்றிக்கொள்ளாமல் விஞ்ஞான ஆராய்ச்சியில் ஈடுபட்டால் மேல்நாட்டவர் சாதித்தவைகளை அவர்கள் செலவழித்த பாதி காலத்திலேயே பெரும்வெற்றியெய்தலாம் என்பது திண்ணம். இவ்வாறாகவே ஆத்மீகஞானம் பெறும் வழி, வகைகளை நம்மிடமிருந்து கேட்டறியப் போகின்றார்கள், அம்மேல் நாட்டவர் என்பதில் ஐயமில்லை.

---

# தேசிகர் பொழியும் தேவ கானம்

## பத்துத் தேவார இசைத் தட்டுகள்

## தருமை ஆதீனத்தின் அரிய தொண்டு

யாழ்ப்பாணம்,

**திரு. ச. அம்பிகைபாகன் அவர்கள் எழுதியவற்றுள் ஒரு குறிப்பு**

தமிழ் மக்களின் அரிய பொக்கிஷமாக விளங்குபவை நாயன்மாரும் ஆழ்வாரும் அருளிய திருப்பாடல்களாகும். வேறு மொழிகளில் தமிழிற் காணப்படுவதுபோலப் பெருந்தொகையான ஊனை உருக்கும் பாடல்களைக் காணமுடியாதென்று பன்மொழிப் புலவர்கள் கூறுகின்றனர். இதனாலேயே தமிழ் பக்திக்குரிய மொழியென்று கூறப்படுகின்றது. * * * தேவாரப் பண்களைக் காத்த பெருமை தமிழ் அரசரையும் சைவ மடங்களையும் சாரும், இடைக்காலத்தில், தேவாரங்களைப் பரம்பரையாக ஓதிவந்த ஓதுவார்களை மடங்களே ஆதரித்துவந்தன.

* * தருமபுர ஆதீனம், திரு. எம். எம். தண்டபாணிதேசிகருடைய பத்துத் தேவார இசைத் தட்டுகளை வெளியிட்டு, தேவாரப் பண்களின் மறுமலர்ச்சிக்கு அரிய தொண்டாற்றியிருக்கிறது. * * *

—ஈழகேசரி, 2—1—55.

# வள்ளுவர் வருத்த காதல்

வித்துவான், திரு. வி. சா. குருசாமி அவர்கள்
தமிழ்ப்பேராசிரியர், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

தொடர்ச்சி

## நினைவுக்கு

*இயற்கையரங்கம். மயில் தன் மரகதத் தோகை விரித்தாடுகிறது. ஆட்டத்தின் அழகிலே ஈடுபட்டு அவள் நிற்கிறள். அருகில் தோழியர் யாரும் இல்லை. வேட்டை விருப்பால் மானைத் துரத்தி வரும் தலைவன் அவன். அவளைக் காணுகின்றன். அணங்கோ! என எண்ணி னன். மயிலோ அல்லது மாதோ என்றன் பின். அவள் இயற்கையாகத் தன் தலையைத் திருப்பினள், அவள் பார் வையில் அவன்மனம் பதிவடைகிறது. பின்னர்.........*

## அவள் கண்கள்

கயலோ ! கருவண்டோ !

குவளையோ ! கோமேதகமோ !

மானோ ! மாவடுவின் பிளவோ !

சேலோ ! செந்தாமரை மலரோ !

என்றெல்லாம் அவளது கருவிழிகளைப்பற்றிக் கற்பனை செய்யக் காத்திருந்தான் அவன். அவளது மருண்டபார்வை அவனை மையல் கொள்ளச் செய்தது. அவள் கண்களின் ஒளி யைக் காண்கின்ருன். கருத்தை இழக்கின்ருன்.

புருவம் என்னும் வில் கண் என்னும் கணைகொண்டு தாக்குவதுபோன்றிருந்தது அவள் பார்வை. வேல் கொண்டு தாக்கியது போன்ற வேதனை அவனுக்கு. வெல்லும் வேல்,



கொல்லும் வாள், கூரிய அம்பு இவைகளைக் கண்கள் என்னும் பெயர்சூட்டி முன்னர்த் தன்னை வருத்திய அந்த ஆரணங்கு சேனை திரட்டிக்கொண்டு வந்துவிட்டதோ என எண்ணினன். சிந்தனை சுழன்றது.

> " நோக்கினள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
> தானைக் கொண்டன்ன துடைத்து."

## கூற்றமோ கூரிய விழிகள்

" கூற்று என்னும் வாழ்நாளைக் கொள்ளும் தெய்வம் இதுவரை நான் பார்த்ததில்லை. இப்பொழுது பார்த்தேன். அது வாளனைய விழிகொண்டு வையகத்தைக் கலக்கப் பெண்வடிவம் கொண்டது போலும்." கூறுகிருன் அவன்.

இப்பொழுது அந்தப் பார்வையில் அன்பும் சிறிது கலந் திருந்தது.

" இல்லை, கண்கள்தான் ! " என்றது அவன் மனம்.

அச்சத்தால் அவள் விழிகள் மருண்டன. பிறவிலங்கினங் களைக்கண்டு மருளுவது மான். அதுவும் பெண்மானுக்கு மிகுந்த அச்சம். அச்சம் விழிகளின் வாயிலாகத்தானே வெளிவரும். மீண்டும் கூறுகின்ருன்:-

" இல்லை! இல்லை! பிணைமானின் இணைவிழிகளோ அவை" என்று.

> "கூற்றமோ ! கண்ணோ ! பிணையோ ! மடவரல்
> நோக்கம்இம் மூன்றும் உடைத்து."

## புருவமென்ற பொல்லாத நண்பன்

"விழிகளிடம் தோழமைகொண்டவை புருவங்கள். அந்தப் புருவத் தோழர்களால் கண்களின் புனிதமே கெட்டுவிடுகிற தாம்." இது அவன் கூற்று. காரணம் ?

" தவறுசெய்யும்போது இடித்துரைப்பவன்தானே நண்பன். நண்பன் நல்லவனுக இருந்தால் அவன் வாய்ச்சொல்லும் நல்லன வாக இருக்கும். நேர்மையற்ற ஒருவன் பிறருக்கு நீதிவழங்குவது

எவ்வாறு ? தன்னிடம் நேர்மையில்லாத காரணத்தால் தன்னைச் சேர்ந்த கண்களையும் தகாதமுறையில் பார்க்கச் செய்கின்றன அந்தப் புருவங்கள். இப்படியெல்லாம் செல்கின்றது அவன் சிந்தனை.

" கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்கஞர்
செய்யல மன் இவள் கண். "

### மதயானை

" மலையையும் தன் மத்தகத்தால் மாய்க்கும் மதயானை அது. அதன் இரண்டு கொம்புகள் எதிர்நிற்போரின் இதயத்தைக் கிழிக்கும் ஆற்றல் வாய்ந்தவை. அத்தனை பெரிய யானைக்கு எத்துணைச் சிறிய கண்கள். சினந்து நோக்கும் அந்தச் சிறிய கண்களில் சிக்கிச் சீரழிந்தோர் எத்துணைபேர்? உருவத்துக்கு ஏற்ற கண்கள் அதற்கு இருக்குமானால்........ !

என்றெல்லாம் முகத்தைப் பட்டுத் துணியால் மூடியிட்டு முகபடாமணிந்த ஒரு மதயானையைப் பற்றிய சிந்தனை அவனுக்கு. மீளவும் எண்ணுகின்றான்.

" மூடியிட்டு அந்த முகத்தைப் பட்டுத்துணி மறைத்திரா விட்டால் நேர்பார்வையில் நிற்கவும் முடியாதுதான் "

இப்படிக் களிறுபற்றிய சிந்தனை அவளது கச்சணிந்த தனங்களைப் பார்த்ததும் வருகிறது அவனுக்கு,

" கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்
படாஅ முலைமேல் துகில். "

### வேண்டுமா ?

அவளது பார்வை கீழும் மேலுமாகச் செல்கிறது.

அவனது அகன்று விரிந்த மார்பு; பருத்ததோள்கள். இவைகளைப் பார்த்தாலே பகைவரும் அஞ்சுவர். உடல் வலிமை, உள்ள வலிமை, உரைக்கும் வலிமை இவைகளை ஒருங்குபெற்றவன் அவன். பிறையனைய அவள் நெற்றியைக் கண்டதும் இவையெல்லாம் எங்கோ ஓடிஒளித்தன. "அறிவில்லாதவர்கள்"



இது அவனது வாய் வார்த்தையில் ஒன்று. " அழகுக்கு அணி செய்கின்றார்களாம் அறிவிலிகள். " அவன் மீண்டும் பேசுகின்றான். " உள்ளக் கவர்ச்சிக்கு நாணம்; உடற்கவர்ச்சிக்கு மான்போன்ற பார்வை இவை இருக்கும்போது பொன்னணிகளை இவள் கழுத்தில், கைகளில், கால்களில் சுமையாக அணிவித்தவர்கள் வேறு என்னவாக இருக்கமுடியும்? " என்றெல்லாம் பேசுகின்றான்.

" பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்கு
அணியெவனோ ஏதில தந்து "

### கள் – காமம்

சிந்தனை முற்றுப்புக்கு வருகிறது.

" உண்டவர்களின் உடல் சோர்வை நீக்கி உவகை ஊட்டுகிறது கள்.

பார்த்தவரின் மனத்தைப் பரவசமடையச் செய்கின்றாள் பருவமங்கை.

காய்ச்சிய கள்ளுக்குக் கண்டாரைக் களிப்பூட்டும் தன்மை இல்லை.

கண்டார்க்குக் களிப்பைத் தருவது காமம். கள், காமம் இவைகளில் 'காமமே கள்ளினும் சிறந்தது' என்ற முடிவுக்கு வருகிறது அவனது சிந்தனை.

" உண்டாரையல்லாது அடுநருக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று "

### நோயும் மருந்தும்

காதற் குறிப்பு இல்லாத அவளது பொதுவான பார்வைக்குத்தான் இத்தனைப் போராட்டங்கள் அவன் மனத்தில்.

அவளுடைய குறிப்பைத் தெரிந்துகொள்ள எண்ணுகின்றான் அந்தத்தலைவன். முதல்முறை பார்த்தபோது இருந்த கொடுமை இப்பொழுது இல்லை. இரண்டுவிதமான பார்வைகள்

இருந்தன அவள்கண்களில். முதல்பார்வை துன்பந்தரும் பார்வையாக இருந்தது. பின்னும் அவள் பார்க்கிருள். முன்செய்த கொடுமையைத் தீர்க்கும் பார்வையாக இருந்தது. நோய் தந்த கண்களே இப்பொழுது நோய் தீர்ப்பதற்கும் உதவியாக உள்ளன.

"இருநோக்கு இவளுண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய்நோக்கு ஒன்று அந்நோய் மருந்து."

### பெரிது !

இருவரது பார்வையும் ஒன்றுபட்டன. காதற்குறிப்புடன் இருவர் கண் வழியே கருத்தும் ஒன்ருேடொன்று கலந்தது. உடல் ஒன்ருேடொன்று சேரும்போது உண்டாகும் உணர்ச்சியைக்காட்டிலும் உள்ளங்கள் ஒன்ருேடொன்று கூடும்பொழுது பிறக்கும்இன்பம் சிறந்ததுதானே ?

"கண் களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்திற்
செம்பாக மன்று பெரிது."

இந்த நிலைமையை ஒருவருக்கொருவர் எவ்வாறு புரிந்து கொள்வது ?

(தொடரும்)

---

### பொம்மலாட்டம்

பொம்மையை உயிருள்ளதுபோல ஆட்டிப் படைக்கிருன் ஆட்டக்காரன். பொம்மையை இயக்குவதற்கு அவனுக்குத் துணையாக இருப்பது கயிறு. கயிறுகளின் அசைவால் இயங்குகிறது பொம்மை. உலகம் பொம்மலாட்ட அரங்கம். உலகில் காணும் உடலெல்லாம் பொம்மைகள். கயிறு - வினைகள்; இயக்குபவன் - இறைவன்.

இதை உணராது நாம் செய்தோம்; நாம் உணர்ந்தோம் என்று பொம்மைகளாகிய நாம் எண்ணுவது எத்தகைய அறிவீனம் ? மேலும் நகைப்பைத் தருவதல்லவா அது ?

குருஞானசம்பந்தர்.

# கோயில் வழிபாடு

திரு. எஸ், [illegible] சீனிவாசாச்சாரியார் அவர்கள் M. A. L. T.
தலைவர், அரசர்கல்லூரி, திருவையாறு.

வஞ்சமுங் களவும் உலகில் ஒழிந்து அன்[illegible]ம் அருளும் ஓங்கத் திகழ்வது சைவசமயம். காமமும் கே[illegible]மும் அழுக்காறும், மாறிமாறித் தனி அரசுபுரிந்து மனிதனை ப[illegible]கங்களோடொப்பக் கீழ் நிலையைப்பெறச் செய்தன. அந்நிலையிலிருந்து அவனை விடுவித்து, அவனது உள்ளத்தைப் பண்படுத்தி, வாய்மை, பொறுமை, கொடை அன்பு, அருள் முதலிய இனிய குணங்களை வளரச்செய்வது சைவம். இயற்கை நிலையிலிருந்த மனிதன் புத்துயிர் பெற்று, பசித்தபோது உண்டு, விடாய்த்தபோது பருகிச் செல்லும் வாழ்க்கை ஒரு வாழ்க்கை அல்ல. உடலில் அழியாப் பொருளான ஆன்மா ஒன்றுண்டு. அதன் தலைவன் மூவா முதல்வனை கடவுள் எனும் உண்மைகளை அவனுக்கு உணர்த்தியதும் சைவமே. இங்ஙனம் நீக்கமற நிறைகின்ற நிமலனை வழிபடுவதின் இன்றியமையாமையைக் கண்டுணர்ந்த மனிதன் அப்பிரானுக்குத் தன் உள்ளமாம் "அகக்கோயில்" கட்டியதோடு மகிழாமல் அறிவு நிலையில் பலதிறப்பட்ட மக்களும் உய்வான்வேண்டிப் "புறக்கோயில்" களும்கட்டி வழிபாடியற்றினன்.

சித்திரத்திலிட்டும், சுவரிற் சார்த்தியும், கந்தின் (கட்டுத் தறியின்) மேல் ஏற்றியும், கருணைக்கடலாங் கடவுளை மனிதன் வணங்கலாயினன். கல், மண், பித்தளை செம்பு, வெள்ளி, தங்கம் முதலியவற்ருல் இறைவனது வடிவத்தைச் சமைத்துப் பரந்த கானிடை, நிழல் செய்யும் மரங்களின்கீழ்ச் சிறு கோயில்கள் எழுந்தன, மக்களது அன்பும் திருவும் பெருகவே, வானளாவிய கோவில்கள் தோன்றின, கருணையே குணமாய்க் கொண்டு, அன்னையாய், அப்பனுய் ஆருயிரை ஆட்கொள்ளும் பான்மையனை அரனைப் பாடி மகிழ்ந்தனர் அடியவர். இதன் விளைவாக இன்றைக்கு நாம் நாடெங்கிலும் காண்கின்ற கோயிலமைப்பும் கோயிலாட்சியும் உருவாயின. கோயில் கட்டி வழிபடும் மனிதனைச், சிவலோகத்தில் அம்மையப்பனை ஆராதிக்கும் அமரனிடமிருந்து வேருக எண்ணவில்லை சிவாகமங்கள் !! அங்ஙன

மாயின். கோயில்கொண்ட இலிங்க வடிவமான இறைவன் திருக் கைலாயத்துத் தேவ தேவனே என்றும் அவனது திருக்கோயிலில் திகழும் தலம் பூலோக கயிலாய மென்றும் எ  துக் காட்டத் தேவை இல்லை.

கடவுள் வழிபாட்டில் இத்துணை உயர்வை அடைந்த மக்கள் இன்றைக்கு என்னநிலையை எய்தினர் என்று நினைத்துப் பார்க்க உள்ளம் கொதிக்கின்றது. "பொன்னர் மேனியனுய், புலித்தோலை அரைக்கசைத்து மின்னர் செஞ்சடைமேல் மிளிர் கொன்றையணிந்த" சிவனே மழபாடியுள் மாணிக்கமாய்த் திகழ்கிறன் என்றும் "மையாடிய கண்டன் மலைமகள் பாகம துடையான், நெய்யாடிய பெருமானுக்கிடம் - வானல்ல, மற்ற எதுவுமல்ல, திரு நெய்த்தானமே என்றும் நாயன்மார் சபதம் செய்து காட்டிய தலங்களில் கடவுளின் உண்மையைக் காணத் தவறுகிறன். என்னே மடமை! இங்கு இறைவனை வடிவத்தில் பூசிக்கலாமா என்று விசாரிக்கப் புகவில்லை. அது ஒரு தனிக் கட்டுரையாகும். வடிவத்தின் துணையின்றி மனிதன் கடவுளைத் தியானிப்பது முடியாத செயல் என்பதைமாத்திரம் சொல்லி நிறுத்துகின்றேன். தியானிக்கின்ற உள்ளம் தன்வழிபாடு கடவுளின் சித்திரத்தைத் தன்னடையாகவே எழுப்பிக்கொள் ளும் - கொள்ளாமல் முடியாது. அதுவே உருவ வழிபாடாகும். பண்பாட்டில் பல்லாயிரம் ஆண்டுகளாகத் திளைத்த சைவ மக்கள் திருக்கோயில்களில் எங்ஙனம் நடக்கின்றூர்கள் என்று சற்று நிதானித்துப் பாருங்கள், ஆங்கிலப் படிப்பும் நாகரிகமும் ஓங்கிய மக்கள் பலர் புறச் சமயிகளின் எதிர்ப்பினுல் தாக்குண்டு சீரிய சைவத்தை விட்டுப் புறம் போந்தனர். வடிவங்களே இல்லாத கோயில்கள் என்று அவர்கள் சென்ற இடங்களிலும், சித்திரங்களும், புகைப் படங்களும், அறிகுறிகளும் திகழ் கின்றனவே! இதை அவர்கள் சிந்தித்தாரில்லையே!! மன்னனை யும் மாசறக் கற்றோரையும் சித்திரத்திலேற்றிச் சால அறிஞர் களும் உலாக் காண்பதை இவர்கள் ஏன் மறக்கவேண்டும்? சைவ மக்களுக்குத் தமது தொன்மை சான்ற உயர்வில் நம்பிக்கை இல்லை - ஊக்கமில்லை - அவர் உள்ளத்தே உரம் குன்றியது. இல்லாவிடில், கடலில் ஆழாது மிதந்தவரும் இறந்தவரைப் பிழைப்பித்தவரும், வானை மண்ணிலே வருவித் தவரும், செத்துக் குளிர்ந்த பிணங்களைச் சிவகுணங்களைப் பாட



வைத்தவருமாகிய மாபெரும் அடியவர்கள் போற்றிய வடிவங் களில் கல்லையும் மண்ணையும் உலோகங்களையுமா காண்பர்?

அவர் நெஞ்சில் வீரமில்லை - தமதென்ற அபிமானமில்லை, ஆர்வமில்லை - அன்பில்லை என்செய்வது? இத்தகைய நவநாகரிகப் பித்தேறியவரும், ஐயப்பான்மையுங்கொண்ட சைவமக்களுக்கு ஒன்றிரண்டு மேனுட்டுச் செய்திகளை உணர்த்துகிறேன். மேனுட்டவர்கள் மிகவும் பண்பாடுடையவர்கள்! படித்தவர்கள். உலகத்தை ஆளும் பெருந்திருவும் ஆற்றலும் உடையவர் என்பதை யாரும் மறுக்க மாட்டார்கள். போர்த்துகல் நாட்டில் பாத்திமா என்ற ஊரில் சிறுவர் மூவருக்குக் காட்சி அளித்த கன்னிமேரியின் சிலை ஒன்றை உலகம்முழுவதும் யாத்திரையாக வலம் செய்வித்து மக்களது விலையுயர்ந்த காணிக்கைகளையும் உள்ளங்களையும் வசப்படுத்திக்கொண்டனர். இச்சிலையைப் போற்றிப் புறஞ் செலுத்தியவர் கத்தோலிக்கு உலகத்தின் பேரரசரான புனிதபோப்பாண்டவர். கலந்துகொண்டவர் அறிவிலுந் திருவிலும் பெரியாராகிய மேற்றிராசனிமார்களும் மடாதிபதிகளும், மற்றும் பல குருமார்களும், கன்னிப்பெண் களுமாகும். இப்படி ஒரு சிறிதளவும் தலைதாழாது, என் சமயம், என்கொள்கை, என்வழிபடு கடவுள் என்று நாடு நகரமெங்கும் மார்பு நிமிர்ந்து நடந்துவரும் புறச் சமயிகளிட மிருந்து சைவப் பெருமக்கள் எத்துணை நற்பழக்கங்களை அறிந்து ஏன் கடைப்பிடிக்கலாகாது? சிவாகமங்கள் வற்புறுத்தும் வழக்கங்களைப் பிறநாட்டுப் பெரியார்கள் வாயிலாகவாவது அறிந்துணர லாகாதா? என்ன பரிதாபம்!

நான் இருப்பதும் ஓர் நாடறிந்த சிவதலமே. இறைவன் திருவுலா வருங்காலத்து, அறிஞர் பலர் பின்போந்து மகிழலாம். ஆயினும் பெரும்பாலும் நடைமுறையில் இதைக் காண்பதற் கில்லை. (விசேட மேளக் கச்சேரிகள் இருக்கும் விழாக்களைப் பற்றி நான் இங்குப் பேசவில்லை) மேலும் இறைவனது பெரு விழாக்களில், உடன் வரும் அன்பரும், "இந்திரன் பிரமன் இமையோரெனும் அவரும் வந்திருந்து வணங்கப் பெறுபவனது விழாவன்றே இது எனும் எண்ணம் மேவிடாது, பேசுவதும் சிரிப்பதும், ஊர்வம்பளப்பதும், 'துர்ப்பாஷை'யாக வசைமாறி தொடுப்பதும், காணுங்கால் சிறிதளவு நல்லெண்ணமுடைய அடியவர்களையும் வருத்துகின்றது. இவ்விடத்தில், நம்நாட்டில்

கிறிஸ்தவ மக்கள் நடத்தும் "கார்ப்பஸ்க்ரிஸ்டி", 'தேவமாதா', "குருத்தோலைநாற்" முதலிய விழாக்களைப் போற்றி எடுத்துக் காட்டாது எங்ஙனம் இருக்க முடியும்? வரிசை வரிசையாக இடம் மாருது மக்கள் நின்று, கைகட்டி வாய்புதைத்துத் தலைதாழ்த்திச் செல்லும் காட்சியை என்னென்று சொல்வது. ஓசை உண்டு - ஆயினும் அது இன்னிசை வாழ்த்தினல் எழுந்ததே - ஆரவாரம் உண்டு - ஆயினும் அது இறைவனது புகழுரைகள் கலந்து ஆயிரக்கணக்கான மிடறுகளிலிருந்து ஒரு முகமாக எழும் இன்ப ஓசையே.

இது நிற்க, நாள்தொறும் ஆலயந் தொழுவார் ஒழுக்கத்தை நோக்குவாம், ஆலயத்தைச் சோம்பர் அம்பலமாக்கித் துணி விரித்துப் படுத்துறங்குவார் எத்துணையர்! உலக வியாபாரங் களை விட்டொழித்து அவற்றிற்கிடையே தாய்முகங்காண விரையும் சேய்போலக் கோயில் சென்று, ஆடிப்பாடி அமலன் நாமம் பிதற்றிப் பணிவதற்குக் கோயிலா - அல்லது அதை ஒரு வீடாக்கி உறங்குவதற்கா? ஆலயத்தின் பல இடங்களிலும் இலை, மலர், பழம், தின்பண்டங்கள் இவற்றை எறிந்து குவித்துக் கவலையற்று வருகிறோம். மூக்கைச் சிந்தி எறிவதும், எச்சிலுமிழ்வதும், தலைவாரி மயிர்களைச் சிதறச்செய்வதும் 'அஸஹ்ய'மான அபசாரங்களாகப் படித்திருக்கிறோம். ஒரு சிறு யஜமானன் வீட்டிற்குள் வேகமாக உள்ளே நுழைய முடியவில்லை. காத்திருந்து உடலை ஒடுக்கிச் சமயம் வாய்த்த உடன் செல்லவேண்டியிருக்கிறது. தேவதேவனுடைய வீட்டிலோ?

சந்நிதானத்தில் நுழைந்தாலோ ஒரே சத்தம் - சத்தம் - சத்தம் பழமென்றும், காய் என்றும். பணமென்றும், சில்லறை யென்றும் பேரொலிகளைக் கேட்கிறோமன்றி இறைவனது பேரொலி (பேர் + ஒலி) யைக் கேட்கிறோமல்லோம். நம் பெருமக்கள் இதை உணர்வாரா? அமைதியாக, வாய்திறவாது, இறைவனது அழகிய உருவைக் "கண்காள்காண்மின்களோ" என்று கண்டு களிக்கும் சூழ்நிலையை உண்டாக்கவேண்டியது சைவன் ஒவ்வொருவனுக்கும் கடப்பாடல்லவா?

ஈண்டுச் சைவப்பெருமக்களுக்கு ஒரு வேண்டுகோள் விடுக் கின்றேன். கிறித்தவர்கள் ஞாயிறுதோறும் பூசைக்குச்சென்று ஒழுகும் முறையைக் கண்டுவாருங்கள். கிறிஸ்த்தவ ஆலயங்கள்



சிலவற்றில் பல நூறு மக்கள் குழுமி இருக்கின்றனர். ஆடவர், பெண்டிர், விருத்தர், பாலர், சேயர், கூனர், குருடர் யாவரும் வந்து வணங்குகின்றனர். சுமார் ஒரு மணி நேரம் நடக்கக் கூடிய ஒரு பூசைக்காலத்தில் மக்கள்பேசும் ஒரு சிறு ஒலியேனும் உண்டா? ஒரு ஓங்கிய ஓசை யுண்டா? ஊர்ப்பேச்சு உண்டா? தயங்கிச் சோம்பிப்படுப்பவர் உண்டா? என்று நேரில் பார்க்க லாமே. ஒரு பெரியவர் என்று கருதப்பட்டவரிடம் ஒரு வீட்டில் அவ்வீட்டு ஜனங்கள் எவ்வளவு மரியாதை காட்டு கிருர்கள். அங்ஙனமாயின் லோகநாதன் தம் எதிரில் இருக் கிருன் என்ற எண்ணமுடைய மக்கள் எத்துணை நயபயத் துடன் நடக்கவேண்டுமென்பது சொல்லவேண்டுமோ?

பெரியோர்கள் நடக்கின்ற முறையே சிறுவர்களுக்கு வழி காட்டியாகையால் அவர்களே சாலவும் சீரிய முறையில் நடக்க வேண்டும். ஆலயங்களில் நிலமும் அதிருமாறு ஓடுவதும், உரக்கச் சிரிப்பதும், இறைவன் இறைவனடியார் அவர்தம் குணனுபவமன்றி வேறு சிந்திப்பதும், அவர் தம் புகழ்சார்ந்த பாடலன்றி வேறு ஓசையிடுவதும், கோயிலைச்சார்ந்த திருப்பணி யன்றி மற்றெப்பணி செய்வதும், தகாதன எனச் சொல்ல வேண்டியதில்லை.

சைவப் பெருமக்கள் ஆகமங்களில் சொல்லிய பெருவழிகளை நல்லோர் வாயிலாகவோ அவர்தம் ஒழுக்கவாயிலாகவோதெரிந்து புனிதமானசூழ்நிலையைச் சிறிதளவும் மாற்ருது, நடந்து உலகத் திற்கு ஒரு வழிகாட்டியாக ஆகவேண்டுமென்று "அம்பரமும் பெருநிலனும்" ஆளநின்ற அமலனே அருள்புரிவாஞக.

---

**துறைசை ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுக்கு இரண்டாவது திருமுறை அளித்ததைக் குறித்த பாடல்**

திருவார் துறைசைத் திருமடத் தோங்கும் சிவமந்திரம்
ஒருவாத நெஞ்சினர் உத்தமப் பண்புகள் ஓங்குநலம்
பெருவாழ்வினர் சுப்பிர மணியப் பெயர் பெற்றவர்வான்
தருவாழ் கொடைக்கையில் சாரும் திருவார் தமிழ்மறையே

துணையாசிரியர்

# ஜீவ ரசம்

திரு. A. கல்யாணசுந்தர தேசிகர் அவர்கள்
சூப்பரிண்டெண்டெண்ட், தேவஸ்தானம் கச்சேரி தருமையாதீனம்.

உலகம் தோன்றி வளர்ந்துவரும் நாட்களில் ஒரு காலத்தில் மனிதனும் மிருகத்தன்மையுடையவனுய் இருந்தான் அறிவின் முதிர்ச்சியில்லாத காரணத்தால். அப்பொழுதெல்லாம் நல்லது கெட்டதைப் பகுத்தறிய முடியாது மிருகங்களைப்போலவே வாழ்ந்தான் என்று நம்முடைய அறிவியற் பெரியோர் கூறுவர். இவ்விதமாக இருந்தவன் அறிவு முதிரமுதிரத் தன்னைச்சுற்றியுள்ள படைப்பின் அருமைப்பாடுகளும் அவைகளைப் பயன்படுத்திக்கொள்ளும் அறிவுத்திறனும்பெற்றுன். அதன் அனுபவங்கள் முதிர்ந்தன. அறிவியல் வளர்ச்சி முற்றியது. இவ்விதமாக நன்மை தீமைகளைத் தனக்குக் கொடுப்பது யார்? எந்தச் சக்தியினுல் இவைகள் உண்டாகின்றன? அந்த மகாசக்தி எத்தகையது? அதற்கும் தனக்குமுள்ள தொடர்பு என்ன? அப்படி அறியும் தான் யார்? அந்த அறிவைப் பெருக்கத்தான் என்ன செய்யவேண்டும் என்பதாகச் சிந்திக்கத் தொடங்கினுன். அந்தச் சிந்தனையின் முடிவாகத் தன்னையும் தன்னைச் சுற்றியுள்ள பொருள்களையும் படைத்து அவைகளின் நல்வினை தீவினைக்கேற்ற அனுபவத்தைக் கொடுக்க ஒரு முதல்வன்—முழுமுதற் பொருள் இருப்பதையும், அந்த முதல்வன் தன்னைப்போன்ற உயிர்களை ஈடேற்றும் பண்பாட்டையும், அதற்கு நன்றியாகத் தன்னுல் செய்யக்கூடிய செயல் ஒன்றுமில்லை என்பதையும் கண்டு சிந்தித்து உணர்ந்து உணர்ந்து உணர்வால் அறியக்கூடிய இன்பம் ஒன்றிருக்கிறது, அது உலகியலிலே காணப்படும் சிற்றின்பத்தைவிடத் தெவிட்டாதது, எப்பொழுதும் நிலைத்து நிற்பது என்பதையும் கண்டான். அந்த நிலைத்த பயனை அடைந்த மேலோர், அதனைத் தாங்கள் அடைந்த முறைகளை விதிமுறையாக வகுத்துக் கொடுத்தார்கள். அவ்விதிமுறைகளையே சாத்திர நூல்களாகக் கொண்டனர் அறிஞர்.

இதனைத்தான் மெய்ஞ்ஞானம் என்பர் பெரியோர். இதனுல் வளர்ந்த பண்பாட்டை, நாகரிகத்தின் உயர்நிலை என்றனர் பெரியோர். இந்தச் சிந்தனைகளை cream of thought என்று பெருமையாகக் கொண்டாடுகின்றனர். அந்தப்



பெருமை நம் நாட்டிற்கே உரியது. அப்பெரியோர்களே நமக்கு ஆசாரிய மூர்த்திகளாகத் திருவவதாரம் செய்து உபதேசமூலம் நம்மைப் பண்படுத்தி ஈடேற்றி நல்வழிப்படுத்திய பெரியோர். அவ்விதம் ஈடேற முதலில், நமக்கும் நம்மைப் படைத்த முழுமுதற் பொருளிடம் ஈடுபாடுவேண்டும். அதற்கு முதற்படியாக நமக்குச் சிந்திக்கும் ஆற்றல்வேண்டும். அச்சிந்தனை நிலைக்க ஒரு பொருள்வேண்டும். அப்பொருளுக்கு உருவங்கள்வேண்டும். நம்மைப் பிணிப்பதாக அத்திருவுருவங்கள் அமையவேண்டும். மக்கள் பலதரப்பட்ட பண்பாடுடையவர்கள். குழந்தையுள்ளம் படைத்தவர்கள் முதல் முதிர்ந்த சிந்தனையுடையவர்கள் ஈருக உள்ளவர்களுடைய பண்பாட்டிற்கு ஏற்றபடி அவை அமையப் பெறவேண்டும். இவ்விதமாக அமைக்கப்பெற்ற திருமேனிகளே நமக்குக் கடவுள் திருமேனிகள். அவ்விதமாக உயர்ந்த சிந்தனையில்வந்த அத்திருமேனிகளை நல்ல பரிசுத்தமான பெரிய இடத்தில் வைத்துப் பலதரப்பட்ட மக்களும் வந்து வழிபட—பண்பட—திட்டம் செய்யப்பட்டவைகளே நம் ஆலயங்கள். இறைவனை அடைய வகுக்கப்பட்ட மார்க்கங்களே நம் சமயங்கள். அதில் சொல்லி ஏற்படுத்தப்பட்ட விதிமுறைகளே நமக்கு வழிபாட்டு முறைகள்—சமய ஒழுக்கங்கள். இவ்விதமாக முதல்படியில் தொடங்கிய நம்முடைய அறிவின் யாத்திரை முதிர்ச்சியடைந்து பலகாலமாகச் சிந்தித்ததின் விளைவாகக் கிடைக்கும் ஆனந்தானுபவமாகிய பேரின்பத்தைப் பெறச் சரியை, கிரியை, யோக, ஞான மார்க்கங்களாகிய படிகளில் ஏறி முடிவாகிய ஞானனுபவமாகிய பேரின்ப உச்சிநிலையை யடைந்து அங்குத் தங்கி அனுபவித்து நிற்கிறது.

அது மனிதன் முயற்சியாலும் திருவருள் துணையாலும் முடியும். என்னையா மனித முயற்சியால் முடியாததுமுளதோ என்று நினைக்கவும் இடமுண்டோ? அதையும் நம் பெரியோர்கள் கண்டு தெளிந்து நமக்கு எவ்வளவு அறிவியல் சக்தியிருந்தாலும் நம்மையும் நமக்குள்ள அறிவையும் உண்டாக்கிய பேரறிவு ஒன்றிருக்கிறது. அது நாம் உண்டாவதற்கு முன்பாகவே உள்ளது. அதன் அருளால்—சக்தியால் உண்டாக்கப்பட்டோம். அறிவு கொடுக்கப்பட்டோம். அதன் அருள் இல்லாமல் ஆணையில்லாமல் நாம் ஒன்றும் செய்ய முடியாது. அதன் முன்னிலையில் நாம் அணுவுக்கணு. ஆகவே இவைகளை இயக்கி ஆட்கொள்ளும் முதற்பொருள் ஒன்று

உண்டு. அந்த முழுமுதற்பொருள் நம்மை இயக்க வெளிப்படுத்தும் சக்திதான் திருவருள். அத்திருவருள் வழி நாம் நின்ருல்தான் முன்னேற, தெளிந்தவழி உண்டு என்பதாகக் கண்டனர் நம் பெரியோர். இவ்விதமாகக் கண்ட பெரியோர்கள் சமயாசாரியர் எனவும் சந்தானுசாரியர்கள் எனவும் இரு பெரும் வழிகளில் நின்று உதவினர். சமயாசாரியர் என்பவர்கள் சமய நிலைக்குக் குறைவேற்பட்டு மக்கள் மனம்மாறித் திகைக்கும் காலத்தில் திருவருளால் அவதரித்து மக்களை நல்வழிப்படுத்திச் செல்பவர்கள். இது எப்போதாவது ஒரு சில காலங்களில் நிகழ்வன. சந்தானுசாரியார்கள் என்பவர்கள் அருள்வழிநின்று உணர்ந்து மக்கள்பேரில் உள்ள பெருங் கருணையினால் ஒரு நிலைத்த ஞானபீடத்தை உண்டாக்கிச் சீடர்களுக்கு உபதேசித்து அது தொடர்ந்து வர, குரு சிஷ்ய பரம்பரையையும் வளர்த்தவர்கள். உபதேச முறையாலே இச் சந்தானம் வளரும். இவைகளே நம் மடாலயங்கள். இங்கு எழுந்தருளியிருந்து அவரவரும் அவரவர் கொள்கைகளைச் சாத்திர வாயிலாக அருள்வழியில் நிற்கும்படி உண்மை அவாவுடைய பக்குவிகளுக்கு உபதேசித்தும் காட்டியும் வருகிருர்கள். இப்படியாக வளர்ந்த மடங்கள் நம்நாட்டில் அநேகமிருக்கின்றன. உண்மை அவாவுடன் மக்கள் ஓடிவந்தார்கள் அக்காலத்தில். இவ்விதமாக உண்டாகிய திருமடங்களில் உள்ள அருட்குருவின் மகிமை தெரிந்து மக்கள் பலரும் போற்றி வந்தனர். வளர்த்தனர். அரசனும் உணரும்படி செய்தனர். ஆட்சியும் ஆதரித்து நிபந்தங்கள் வழங்கின. அப் பெரியார்களையும் அவர்களுடைய உபதேசங்களையும் போற்றி வளர்த்தன. ஆனுல் காலநிலை மாறியது. நாட்டில் குழப்பநிலை ஏற்பட்டு அந்நிலை ஆட்சிக்கு வருவதாயிற்று. (வரும்)

---

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் காசிவாசி

**ஸ்ரீலஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களுக்கு இரண்டாவது திருமுறை அளித்ததைக் குறித்த பாடல்**

திருப்பனந்தாள் காசிமடத் தினில் விளங்கும் பெருந்தவத்தோர்
விருப்பமொடு வெறுப்புமிலா விழுப்பமுளார் புகழ்வெள்ளிப்
பொருப்பனையே தொழும்உளங்கொள் புனிதமுனி அருள்நந்தி
தருப்பரவு திருக்கரத்தில் சாரும் அருள் திருமறையே

துணையாசிரியர்



# திருச்செங்காட்டங்குடி உத்தராபதியார்

திரு. R. வேலாயுத ஓதுவாமூர்த்திகள்
ஆசிரியர், ஆதீனத் தேவாரப் பாடசாலை, தருமபுரம்.

## செங்காட்டங்குடி

இது சமய ஆசாரிய மூர்த்திகளது தேவாரத் திருப்பதிகங்கள் பெற்றது. காவிரியின் தென்பால் சோழவளநாட்டுத் தலங்களுள் எழுபத்து நான்காவதாக வைத்து எண்ணப் பெறுகிறது. விநாயகப்பெருமான் கயமுகாசுரனைச் சம்ஹரித்த இரத்த வெள்ளம்பெருகிய காரணம்பற்றி இப்பெயர் எய்தியது. மந்த்ரபுரி, தந்த்ரபுரி, சத்யபுரி, சமுத்ரபுரி, பாஸ்கரபுரி, இந்த்ரபுரி ஆய பெயர்களையும் உடையது. கணபதி கயமுகனைக் கொன்ற பாவம் நீங்கிட இங்குத் திகழ்கின்ற ஆலயத்தினை ஆக்கிப் பெருமானைத் தாபித்துப் பூசித்து வழிபட்டு அருளுற்ருர். இக்காரணம்பற்றி ஆலயம் கணபதீச்சரம் எனும் பெயரோடு திகழ்கின்றது. சிறுத்தொண்டநாயனுர் அவதரித்துப் பணி செய்து வழிபட்டு அருளுற்ற தலமும் இதுவே.

## சிறுத்தொண்டர்

இவர் மாமாத்திர குலத்துவந்த அந்தணர். பரஞ்சோதியார் எனும் பெயருடையார். அரசர்பால் சேனுதிபதித் தொழிலில், தலைநின்ற புகழினர். புலமைமிக்கு அறிவாற் சிறந்த வித்தகர், வாதாபி நகரினை வெற்றிகண்ட வீரர். அடியார் பணிபுரிந்து அமுதூட்டி நிதியோடு விரும்பிய எல்லாம் ஈந்து மனம் உவந்திடும் நியதியார். எக்கணத்தும் இறைவன் இணையடி மறவாத சிந்தையர். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுரை வரவேற்று உபசரித்து அவரது உடனுறைவும் பெற்ற உத்தமர். அவர் திருப்பதிகத்து வைத்துப் போற்றிடப் பெற்ற சிறப்பினர். இவரது தொண்டு கண்டு அன்புநுகரக், கயிலையினின்றும் பைரவராகி உத்தராபதியார் எழுந்தருளினர். அவர் விரும்பிய வண்ணம் தனது அருமைத் தனிமகன் ஐயாண்டுச் சீராளனைத்

தாய் பிடிக்கத் தான் அரிந்து அமுதாக்கி உளமகிழ்வுடன் படைத்த விறலினர். அருள் வழிநின்று மீளவும் அழைத்திட்ட பேராளர். மலைமங்கை உமையாரோடு சரவணரும் நடு இருந்தருள விசும்பிடை முன்னின்று உத்தராபதியார் விடைமிசைக் காட்சி நல்கினர். அறக்கிழத்தி வெண்காட்டுநங்கை தாதி சந்தனநங்கை, புதல்வர் சீராளரொடும், நல்கிய அவ் அருட் பெருவாழ்வினைப் பெற்றாராகி என்றும் நீங்காத இன்புற்றனர்.

## பைரவமூர்த்தி

இவர், சிறுத்தொண்டர்க்கு அருள்புரியவந்த பைரவமூர்த்தி, செங்காட்டாங்குடிக் கணபதீச்சரத்துக், காட்டாத்தி நீழலில் எழுந்தருளியிருந்து அடியார்கட்கு நல்வாழ்வினை அருளிடுகின்றனர். கயிலைத் திருமலையினின்றும் சிறுத்தொண்ட நாயனாரது பெருமையை உலகம் உணர்ந்து உய்ய வந்தவர். ஒப்பற்ற சிறப்பொடும் அமைந்த அற்புத அருள் வடிவினர், பிக்ஷாடனர், பைரவர், யோகியார், தியாகேசர், ஆனந்தக்கூத்தர் ஆய சிவ மூர்த்திகளது சிறப்பெலாம் அமைய அமைந்தவர், உத்தராபதியார். இவரது உருவக்காட்சி; பிக்ஷாடனர், யோகியாரையும் வரலாற்றுக்காட்சி; பைரவரையும், தரிசனக் காட்சி; அருந்திறமா நடமாடும் அம்மான் தன்னைச் செங்காட்டங்குடியதனில் கண்டேன் நானே எனும் திருமுறைத் திருவாக்கும் உணர்த்தி நின்ற தியாகேசர், ஆனந்தக்கூத்தரையும், நினைவு கூர்விக்கின்ற சிறப்புடையன.

## அரசர் கண்ட உத்தராபதியார்

அன்று சிறுத்தொண்டர்க்காகப், பயிரவராகி வந்து பிள்ளைக் கறியுண்டு சீராளர் வெண்காட்டுநங்கை, சந்தன நங்கை சிறுத்தொண்டர், ஆய இவர்கட்கு அருளை நல்கிய உத்தராபதியார்; ஆங்கு திருவுருக்கரந்தனர் என்பது வரலாறு. அம்முறையின் அருள்புரிய வந்த, அவ்வடிவினரைக் கண்ட அடியவர்கள், கூறக்கேட்டனர், அரசர், ஐயடிகள் காடவர்கோன். அன்பு மீதூர உடன் செங்காட்டங்குடி உற்றனர். சிற்பிகள் பலரைக் கூட்டினர், அவ் அருள் வடிவினை, இருபத்தொரு நாட்களில் ஆக்கித் தந்திட, ஆணை இட்டனர். தவறிடின் அரசர் ஆணை சீற்றம்கொளும் என்பதும்



உணர்ந்தனர் சிற்பிகள். அரசே ஆணைப்படி ஆவன செய்வோம் என்று வணக்கம் செலுத்திக் குறித்த செயல்வழி தங்கள் அருமுயற்சி கொண்டு முற்படலாயினர். அனைவரும் ஒருங்கு கூடி அவ் அருள்வடிவினை உரிய முறையில் கருக்கட்டித் தயாரித்துப் பின் உருக்கிய உலோகச்சேர்க்கையாகிய மழுவினை வார்ப்பித்தனர். அருளுருவம் கைவரப்பெற இல்லை. முயற்சிகள் கொண்டு, பின்னும் பின்னும் பலமுறை வார்ப்பித்தும், பயனுறாமைகண்டு, அரசர் ஆணைக்கு அஞ்சி வருந்துவார்களாயினர். அரசராணை ஒருபுறம், முயற்சியில் தோல்வி ஒருபுறம், உந்திட, அச்சமும் கவலையும் மிக்குடையர்களாயினர், இருபத்தோராவது நாள் இரவு மறுமுறையும் முயலும்தன்மையராகி வார்ப்பித்தற்குரிய, உலோகங்களை உரிய பாத்திரத்தில் இட்டுத் தீயில் ஏற்றி உருகிட அமைத்தனர். மழு கொதித்துக் கொண்டிருக்கிறது. மூர்த்தியாக அமைதற்குரிய மூர்த்தியாரது வடிவச்சிந்தனையுடையவர்களாய் அமைந்து தியானத்தில் ஆழ்ந்தார்கள்.

## பெருமான் யோகியாராய் வருதல்

நடுநேரம், நள்ளிரவு. அரையிற் காவியுடை, கைகளிற் கபாலம், சூலம் தாங்கியவர், வயோதிகம் மிக்குத் தளர்ந்த வடிவினர், பரதேசியார், ஒருவர் ஆங்கு உற்றனர். தாகம் மிகுதி, களைப்பால் தவிக்கின்றேன். பருகத் தண்ணீர் தருவீர்களாக? என்று வேண்டினர். இங்குத் தண்ணீர் இல்லை, மழு கொதித்துக்கொண்டிருக்கிறது வேண்டுமாயின் தருகின்றோம், பருகுங்கள் என்றனர் சிற்பியர்கள். ஆ!...... அதனையா தருகின்றீர்கள்; பெருமகிழ்ச்சி. தாருங்கள் என இருகைகளை யேந்தினர். அகப்பையால் முகந்து தந்திடப்பெற்ற அம்மழு முழுவதையும் வாங்கி உண்டனர். கண்டனர் சிற்பிகள். மழுவினைக் கண்டிலர், மானை மறைத்து பரதேசியராக வந்து வாங்கி உண்ட கிழவரையும் கண்டிலர். இன்று திகழ்கின்ற உத்தராபதியாரின் அருள் வடிவத்தையே ஆங்குக் கண்டனர். உள்ளப் பெருமகிழ்ச்சி மேலெழுந்து பொங்கிட விம்மினர். அமுதம் உண்டாரொத்து ஆனந்தம் உற்றனர். நெற்றியின் மிசைச் சிறிது மேலெழுந்து புடைத்தமைபோலக் காணப்பெற்றமையைக் கண்டு தங்கள் கைத்திறமையையும் கொஞ்சம் அதிற் பங்குகொள்ள எண்ணினர், உளிகொண்டு செதுக்கினர்.

பயனுக இரத்தம் பெருகிடக் கண்டனர். அச்சம் மிக்கு உற்றார் களாகி அரசரிடம் ஓடி அறிவித்துப் பின் தங்கள் அறியாமை யையும் தெரிவித்தனர். கேட்ட அரசர் ஓடோடி வந்தனர் அருள்வடிவ மூர்த்தியைக்கண்டு அடிபணிந்தனர். பரவசத் தோடு பதைப்பும் உற்றாராகிக் கண்ணில் நீர்மல்கிடக் கரங்கள் கூப்பிப் புவிமிசை வீழ்ந்து பல முறையும் பணிந்தேத்தி மெய் சிலிர்த்திட நின்றனர், இறைஞ்சினர். பெருகிய இரத்தமும் நின்று அமைதியுற்றது. ஆனந்த வெள்ளத்திடை ஆழ்ந்தாராகி ஆடினர், பாடினர். வற்றாத இன்ப உள்ளத்தராகி மகிழ் வெய்தினர்.

### அருளால் எழுந்த அசரீரி

அரசே கவலற்க. ஆலயம் எடுத்து விழாச் செய்தருள்க. அக்காலம் சண்பகமணம், வீசிடக் காட்சி நல்கிடுவோம் என அருள்வழி யெழுந்த ஆகாயவாணி அருளியமை கேட்டுப் பரவசமாயினர்.

### ஆலயம் எடுத்து அரன் விழாக் காணல்

அரசர் அரன் அருள்வழிக், கணபதீச்சரத்தினைப் புதுப் பித்துப் பணிகள் பலபுரிந்து, நிபந்தங்கள் அமைத்தனர். கும்பாபிஷேகம் புரிவித்து மகிழ்ந்தனர். அந்நாள், உத்தரா பதியாரோடு ஏனைய விழாமூர்த்திகட்கும் விசேட மகாபிஷேக அலங்காரங்கள் செய்வித்துத், திருவீதி உலாவரச்செய்து தரிசித்துக் கண்பெற்றபயன் உற்றேன் என்று மாபெருங் களிப் புற்றனர்.

### கயிலைக் காட்சி கண்டு அருளுறுதல்

அதுகாலை வடக்குவீதியிற், பெருமான் உலாவரும் பொழுது, திருவருட்குறிப்பின்வழி, சண்பகமணம் வீசிடக் கண் டனர். அங்கு இறைவன் தமது திருக்கயிலாய தரிசனத்தைத் தந்தருளினர். அரசர் கயிலாயக்காட்சி கண்டு, அருளை எண்ணிய உள்ளத்தராய் ஆனந்த பரவசமுற்று அருளுற்றனர்.

### பூசனைச் சிறப்பு

இத்தலத்துத் திகழ்கின்ற பூசனை தனிச் சிறப்புடையது. ஏனைய தலங்களில் விநாயகர், நடராஜர் ஆயமூர்த்திகட்குப், பூசனை நிகழ்த்திய பின்பே ஏனைய மூர்த்திகட்குப், பூசனை



நடைபெறுவது மரபு. அவ்வாறின்றி இங்கு, உத்திராபதியார்க் கும், கணபதீச்சுவரர்க்கும், முன்னர் பூசனை நிகழ்த்திய பின்பே ஏனைய மூர்த்திகட்கு நடைபெறுவது முறைமையாகத் திகழ்கின்றது. அம்முறைமை, அவ்வகையின் உணர்வுடைய பெரியோர்களது, சிந்தனைக்குரியவை. நோக்குமிடத்துக் கணபதி தாபித்துப் பூசித்த மூர்த்தி ஆதலின் பூசனை நிகழ்த் தும் அக்கணபதியே ஆங்குப் பெருமானுரோடு முன்னிருந்து பூசனையாற்றி ஆன்மாக்களுக்கு அருளை வழங்குகின்றார் என்பது குறிப்புப்போலும். தரிசித்திடும் அன்பர்கள் உணர்வார்களாக,

### விழாச் சிறப்பு

இங்கு நடைபெறுகின்ற விழாக்கள் பல. அவற்றுள் ஆண்டுதோறும் சித்திரைப் பரணி நாளில் திகழ்கின்ற அமுது படையல் விழா (சிறுத்தொண்டர் உத்திராபதியாருக்குப் பிள்ளைக்கறியமுது படைத்து அருளுற்ற வரலாற்றுவிழா) மிகச்சிறப்பாக நடைபெறுகின்றது. அதனோடு ஐப்பசிப்பரணி நாள்விழா, சித்திரைப் பரணிநாள் விழாவிற்குப்பின் இருபத் தோராவதுநாள் நடைபெறுகின்ற சண்பகவிழா. ஆய விழாக் களும் சிறப்பாக நடைபெறுகின்றன.

இச்சண்பகவிழா நிகழ்ச்சியே; மேற்குறித்த வரலாற்றின் உண்மையை, எங்கள் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் 1—8—54 ஜன்ம நக்ஷத்திர விசேடம் பற்றித் தலத்திருப்பதிக வெளியீட்டுடன், அபிடேக ஆராதனை திருமுறை வழிபாட்டுக் காலத்து ஸ்ரீ உத்தராபதீச்சுவரர் சந்நிதித் திருமுன்பு கர்ண பரம்பரை வழியாக அறிந்த பெரியோர்களிடமிருந்து எனது உணர்விற்கு வந்தருளியது.

## வாழ்த்து

**வித்துவான், ச. சேதுசுப்பிரமணியப் பிள்ளை,**
தமிழ்ப்பேராசிரியர், ஆதீனக் கீழைக்கலைக்கல்லூரி, தருமபுரம்.

சூழிருளை நீக்கும் சுடரேபோல் நெஞ்சிருளை
ஏழிரண் டாண்டில் இனிதகற்றி—வாழியசீர்ப்
பொன்மொழிகள் கொண்ட புகழ்ஞான சம்பந்தம்
என்றென்றும் வாழ்க இனிது.

# *கண்மணி

திரு. பண்டித. அ. கந்தசாமிப் பிள்ளை அவர்கள்

தமிழாசிரியர், தருமபுரம்.

மெய், வாய், கண், மூக்கு, செவியென்னும் உறுப்புக்கள் இடவாகுபெயராய் இந்திரியங்களையும் உணர்த்தும். அவை உற்றறிதல் முதலாகிய தன்மையால் ஞானேந்திரியம் என்னப் படும். இந்திரியம், பொறி, வாயில் என்பன ஒரு பொருளன. இவ்வைந்தனுள்ளும் கண்ணே சிறந்ததென்ப. ஏனையவற்றினும் சத்துவ குணம் மிக்குச் சென்றியைந்து விடயத்தை யறிய வல்ல தாகையால் "கண்ணிற் சிறந்த உறுப்பு இல்லை" எனப் பட்டது. "கண்ணிற் சிறந்த உறுப்பில்லை யாவதுங் காட்டி யதே" என அதை இலக்கியத்து வைத்தும் ஓதினர்.

கண்ணின் இயலாகிய அகற்சி, நீளம், வெண்மை, கருமை, ஒளியுடைமை ஆகிய ஐந்தனையும் ஈசனொடுபடுத்தித் திருக் கோவையார் கூறும். அது:—

"ஈசற்கி யான்வைத்த அன்பின் அகன்றவன் வாங்கியவென்
பாசத்திற் காரென்று அவன்தில்லையின் ஒளிபோன்றுஅவன்
பூசத்திருநீறென வெளுத்துஆங்கவன் பூங்கழல் யாம் [ரேருள்
பேசத்திரு வார்த்தையிற் பெருநீளம் பெருங்கண்களே"

என்பது.

கலப்புத்தன்மையால் உடலும் உயிரும்போன்ற இறைவன், பொருட்டன்மையால் வேருகிநிற்பன் எனற்கு, 'கண்ணும், அருக்கனும்போல' எனவும், உயிர்க்கு உயிராந்தன்மையாற் 'கண்ணொளியும், ஆன்மபோதமும்போல்' எனவும் உவமங்கூற வந்தவிடத்துக் கண் ஆன்மாவிற்கு உவமையாக உண்மையை நூல்கள் கூறும்.

---

* ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருக்கோவையாரில் 'கண்மணி' என்ற தலைப்பில் எழுதுமாறு கூறிய திருவருளாணையை மேற்கொண்டு எழுதப்பெற்றது.



ஆன்மா சேதனனும் அல்லன்; அசேதனனும் அல்லன். அறிவித்தாலறியும் சித்து என்பதற்கும் கண்ணே எடுத்துக் காட்டாக வருகிறது. அதனை,

"பலர்புகழ் ஞாயிறு படரின் அல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போல்"

என்னும், சிவஞானபோதச் சிறப்புப் பாயிரம் முதலியவற்றால் அறிக.

இறுதியாகக் கண்ணின் அரிய தன்மையைக் கூறுமிடத்து 'விஞ்ஞானிகள் செயற்கை மழை பெய்வித்தல் முதலிய எத் துணையோ வியத்தகு கருவிகளையெல்லாம் காண வல்லுநரா யினும் கண்போல ஒரு கருவி காண மாட்டுவரோ? என்பர் தற்காலத் தத்துவ நூற்புலவர் ஒருவர். இறைவனது அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும் அவனருளே கண்ணாகக் கண்ட பெரியார் அவனைக் "கண்ணே கண்ணிற் கருமணியே மணிஆடு பாவாய் காவாய்" என்றழைக்கின்றனர்.

கண்கள் மக்கட்கு ஒரே காலத்தில் இருவேறு பொருள்களை ஒருங்கு அறியாவாறு அமைக்கப்பட்டுள்ளன. இரு கண்ணுங் கூடியே ஒரு பொருளை நன்கறிய முடியும். இந்நிகழ்ச்சியை உவமமாகக் கொண்டு, 'கணவனும் மனைவியும் ஒருமனப்பட்டு அறம் புரிக' என்னும் நீதியை வற்புறுத்தினர் துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளார். அது:— "காதல் மனையாளும் காதலனும் மாறின்றித் தீதில் ஒருகருமம் செய்பவே......... நோக்கல்தான் கண்ணிரண்டும் ஒன்றையே காண்" என்பது. சிங்கத்துக்கு ஆயின், கண்கள் தலைப் பாகத்தில் படைக்கப்பட் டுள்ளதால் ஒருகாலத்தில் இருவேறு பொருள்களை நன்கு அறிந்துகொள்ளமுடியும். இந்நிகழ்ச்சியை வைத்தே இலக்கண நூலார் சூத்திர நிலைகளில் ஒன்றற்கு "அரிமா நோக்கம்" எனப் பெயரிட்டனர்.

கண்ணிடத்து நின்று உருவத்தைக் கவர்வது கருவிழியாம். அதுவே கண்மணி என்னப்படும். இக் கண்மணியின் அமைப்பு பிற பிராணிகளினும் காக்கைக்கு வேறுபட அமைந்துள்ளது. காக்கையின் இரு விழிக்கும் ஓரேமணி. ஒரு பொருளைப் பார்க்க

வேண்டின் தன் முகத்தைச் சாய்த்து அப்பக்கத்து விழியில் மணிவர நேர் பொருளைக் கவரும். அதுபோலவே மறுபுறம் சாய்த்த விழிக்கு மணிவர அதன் நேருள்ள பொருளையறியும் — இவ்வமைப்புக் காக்கை விழிக்குத் தனிப்பட அமைந்தது*

விழி இரண்டு; மணி ஒன்று ஆக உள்ள இவ்வமைப்பை அரிய உவமையாகக் கொண்டு ஓர் சீரிய கருத்தைத் தெளிவுறுத் தத் திருக்கோவையாருக்கு ஒரு தக்க இடம் கிடைத்தது:—

இயற்கைப் புணர்ச்சியில் தலைவியை எதிர்ப்பட்ட தலைவன்.

"பாட்டிய லூரனை யாரூரில் முன்னம் பரவையுடன்
கூட்டிய தெய்வம் முத் தாற்றிட்ட செம்பொன் குளத்தில்வரக்
காட்டிய தெய்வம் முன் சேயிழைதன்னை அக் காவகத்தே
ஈட்டிய தெய்வம் தரும் நெஞ்சமே செலின் இன்னமுமே"

என்று சென்று, இடந் தலைப்பாடு பெற்றுப் பின் பாங்கற்கூட்டமும் பெற்றுப் பாங்கிமதியுடன்பாடு பெற முயல்பவனைப் பாங்கி இவ் ஐயர் வார்த்தை ஏதோ ஒரு ஆழ்ந்த குறிக் கோளைக்காட்டுகிறது. "வேழம் முன்னுக் கலையாய்ப் பிற வாய்ப்பின்னும் மென்றழையாய், மாழை மென்னேக்கி இடையாய்க்கழிந்தது வந்து வந்தே" என்று தெரிந்து பின் தலைவி பக்கல் வந்து. நாணநாட்டம் நாடி எம் தலைவியும் இவ்வையனும், உடம்பு இரண்டும் உயிர் ஒன்றுமாய் இயைந்த கேண்மையர் என அவர் தம் காதலின் திறத்தை வியந்து தனக்குள் கூறிக் கொள்ளும் இடம் அது.

இவ்விடத்து, அந்த உவமை ஆளப்படுகிறது. அது:—

"காகத்திரு கண்ணிற்கொன்றே மணிகலந் தாங்கிருவர்
ஆகத்துள் ஓருயிர்கண்டனம் யாமின்று யாவையுமாம்
ஏகத்தொருவ னிரும்பொழி லம்பலவன் மலையில்
தோகைக்கும் தோன்றற்கும் ஒன்ருய் வருமின்பதுன்பங்களே"

* இதுப்பற்றிய கதையொன்று இராமாயணத்தில் வழங்குகிறது அதனைச் சுந்தரகாண்டம் காட்சிப் படலத்துக் காண்க.



இக்கருத்துத் தொல்காப்பியப் பொருளதிகாரத்து (களவியல், சூ-ம் 23 உரை) உதாரணச் செய்யுள் ஒன்றில் அமைந்துள்ளது அது:—

"இவள்வயிற் செலினே இவற்கு உடம்பு வறிதே
இவன்வயிற் செலினே இவட்கு உடம்பு வறிதே
காக்கையிருகணின் ஒருமணி போலக்
குன்றுகெழுநாடற்கும் கொடிச்சிக்கும்
ஒன்றுபோன்மன்னிய சென்றுவாழுயிரே"

என்பதாம்.

இனி, திருவாதவூர் மகிழ்செழுமறை முனிவர் அறிவனூற் பொருளும், உலகநூல் வழக்குமென்றிருபொருள் நுதலி எடுத்துக்கொண்ட திருக்கோவையாரில், மேற்குறித்த 'காகத் திருகண்ணிற்கு' என்னும் இத்திருப்பாடலில் இரண்டு உடம் பிற்கு ஓர் உயிர் என்பதன் அறிவனூற் பொருளைக் கருதில் உடம்பில் உயிர்போல உயிரில் இறைவன் கலந்து நிற்கும் தன்மை அத்துவிதமென்னப்படும். உயிரில் கலந்த இறைவனை நோக்க, உயிரும், அதுகலந்த உடம்பும் ஆகிய இரண்டும், இரண்டு உடம்புகளுக்கும் இறைவன் ஓர் உயிர் ஆவன்; ஆகவே அத்துவித நிலையில் உயிரோடு இறைவன் கலந்த நிலை ஒன்ருகாது இரண்டாயும் படாது இருக்கும் நிலையே "காகத்திரு கண்ணிற்கு" என்னும் பாடலின் கிடக்கும் அறிவனூற் கருத்து அத்துவித நிலையேயாம். அதனை,

"மன்றவேதம் அத்துவிதம் என்று உரைத்திடும் மாண்பால்
ஒன்றலால் பொருளிலை யெனின் உணர்த்துதும் தெளிதி
நின்ற ஆருயிர்பலவும் தானுய் நிற்கும் நிமலனே"

என்னும் கச்சியப்ப முனிவர் வாக்கினுலும் அறிக.

இவற்ருல், கண்ணும், கண்ணின் மணியும், அவை உவமையாக வருவனவற்றிற் சிலவும் சிறப்பாகத் திருக்கோவையாரில் ஆண்டவாறும் ஒருவாறு அறியலாகின்றன.

தொடர் கதை

# மாசில் வீணை

**வித்துவான், திரு. சொ. சிங்காரவேலன் அவர்கள்,**
தமிழ்ப்பேராசிரியர், தருமபுர ஆதீனக் கீழைக்கலைக் கல்லூரி.

கொற்கை நகரத்தைப் பார்வையிடுவதற்காகவும், கொற்கைத் துறைமுகத்திலிருந்து அன்று அயல்நாட்டு வணிகர்க்காகச் செல்லும் பாண்டியநாட்டுக் கப்பல்களை வழியனுப்புவதற்காகவும் மதுரை மாநகரத்திலிருந்து மன்னன் உக்கிரப் பெருவழுதி பாண்டிமாதேவியுடன் வந்திருந்தான்! கொற்கைத் துறைமுகத்திலோ கூட்டம் சொல்லி முடியாது! தமிழ் வணிகர்களும் அயல்நாட்டு வணிகர்களுமாக ஒரே வணிகர் கூட்டம்! ஆயிரக்கணக்கான ஆடவரும் பெண்டிரும் வேறு தமிழர் பொருட்கப்பல்களை வேடிக்கை பார்க்க வந்திருந்தனர். 'ஜே ஜே என்று' ஒரே கூட்டம். நீலக்கடலோசையோடு மக்கட்கடல் எழுப்பிய பேரோசை கலந்து ஒரு திருவிழாப் போல ஆக்கிவிட்டிருந்தது அன்று துறைமுகத்தை!

காவிரிப்பூம்பட்டினத்துக் கடற்கரையிலே நிகழும் இந்திர விழாவைப் போன்றிருந்தது அன்றைய நிலை! துறைமுகத்துக் கருகாமையில், இராஜ பரிவாரங்கள் இறங்கியிருந்தன. பாண்டிய மன்னனும், மாதேவியுடன் இருந்து காண்பதற்கென்று அமைக்கப்பட்ட துறைமுக மணி மண்டபத்தை யடுத்துள்ள மேடையில் மன்னன் நின்றிருந்தான்! மருங்கில் அமைச்சர், தளபதி, கப்பற்படைத் தலைவன் முதலியோர் நின்றிருந்தனர். மன்னனுக்குப் பின்புறத்தே வெண் கொற்றக் குடையைப் பிடித்து நின்றான் ஒரு வீரன்!

இன்னும் சற்று நேரத்தில் கப்பல்கள் புறப்பட இருந்தன. கப்பல்களின் உச்சியில் இருந்து பறந்தது "கயல்" பொறித்த பாண்டியக் கொடி!

மணி மண்டபத்துள்ள தனியறையில் இருந்தாள் பாண்டிமாதேவி. அருகில் தோழி நப்பசலை. வேறு யாரும் இல்லை.



'நப்பசலை! இங்கே வா!' என்று அழைத்தாள் பாண்டிமாதேவி. 'தேவி! என்னவேண்டும்? என்று கூறியபடிக் குதித்தோடி வந்தாள் நப்பசலை. அவள் கைகளில் அன்று காலையில் மன்னனைக் காணவந்த தமிழ் வாணிகன் ஒருவன், கையுறையாகக் கொடுத்துச்சென்ற அழகுநிறைந்த கொற்கைத் துறைமுத்துமாலை' இருந்தது.

'என்னடி அது கையில்?'

'உங்களுக்குத்தானம்மா! நம்கொற்கைத்துறையிலே மூழ்கி எடுத்த முத்தால் தொடுத்த முத்துமாலை! காலையில்வந்தவணிகக் கூட்டம் கொடுத்தது' என்று கூறியவண்ணம் ஓடிவந்து அரசியின் கழுத்தில் அதனை அணிந்து சற்று தூரத்தில் ஓடிநின்று அழகுபார்த்தாள் நப்பசலை. உண்மையிலே அந்தமாலை அரசியின் கமுகுக் கழுத்துக்கு ஓர் பேரெழில் கொடுத்துக்கொண்டிருந்தது. இப்போது யாரோ மணிமண்டபத்தின் பின்புறம் இரகசியம் பேசும் குரல்கள் கேட்டன. பாண்டிமாதேவி சத்தம்போடாதே என்று சமிக்ஞை செய்துவிட்டு, துணித்திரையின் ஓரமாக நின்று கவனித்துக் கேட்டாள். குரலில் கம்பீரமானது. பழகிய குரலாக இருந்தது. மற்றொன்று புதிதாக இருந்தது.

'ஓய் வணிகரே! இப்போது புறப்படுவது மூன்று கப்பல்கள்! இரண்டில் முத்தும், பிற வாசனைப் பொருள்களும்! இன்னொன்றில் தமிழர் நெய்த உயர்தரக ஆடைகள்! ஆனால் மன்னரிடமோ இன்று புறப்படுவது இரண்டு கப்பல்கள்தாம் என்று தெரிவித்திருக்கிறேன்'

'தளபதியாரே! மன்னருக்குத் தெரிந்துவிட்டால் ஆபத்தாகுமே'

'அதைப்பற்றி உமக்கேனய்யா கவலை! இந்த மூன்றாவது கப்பலுக்குரிய தொகை மூன்று கோடியே ஐம்பது இலட்சம் துலைப்பொன் முன்னமேயே என்பால் வந்துவிட்டது! கவலைப் படாதீர். இம் புறப்படும்'

'மன்னருக்கு தெரிந்துவிட்டால்,.........?'

'இந்தச் சந்தனத்தேவன் இருக்கும் வரையில் மன்னரால் ஒன்றும் நேராதய்யா உமக்கு.'

சந்தனத்தேவன் ! இந்த பெயரைக்கேட்டதும் பாண்டிமாதேவி மிக்க சினமடைந்தாள். மன்னருக்குத் துணைவன் போன்றிருந்து, அரசியல் காரியங்களில் இப்படி மோசடிசெய்து வருகிற வஞ்சகன். சந்தனத்தேவன் என்று இப்போதுதான் புரிந்துகொண்டாள்! அன்று முதலாகப் பாண்டிமாதேவிக்கு அவனைப்பற்றிய வெறுப்பு வளரத் தொடங்கியது.

*

மன்னனின் வார்த்தைகள் அரசியின் மனத்தில் அந்த சம்பவத்தை நினைப்பூட்டிவிட்டன. 'பாண்டிமாதேவி! என்ன பேசாமடந்தையாகிவிட்டாய்! நாளைக் காலையே நாம் புறப்படுவோம் பறம்புநாட்டுக்கு! உனக்கும் உள்ளத்துக்குக் கொஞ்சம் உற்சாகமாக இருக்கும் அல்லவா?... அன்பே! நகரமெல்லாம் வெற்றிக்கொண்டாட்டத்தில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் போது நாம் மட்டும் ஏன் இப்படி தனியாக நிற்க வேண்டும்.... திறந்தபல்லக்கில் நான்கு வீதிகளிலும் சென்று நகர மக்கள் மகிழ்ச்சியைக் காண்போம் வா !' என்ற வழுதியும் பாண்டிமாதேவியும் நிலாமுற்றத்தைவிட்டு மெல்ல நடந்தார்கள் ! நகரத்தினின்றெழுந்த ஆரவாரங்களும், கோயில் பூசை ஆராய்ச்சிமணி முழக்கமும் யாவும் சேர்ந்து காற்றில் மிதந்துவந்தன !

*

மதுரை நகரம் முழுவதும் இப்படி மகிழ்ச்சிக் கூத்தாடும் வேளையில் அதோ, வீரர் வீதியில் ஒரு இல்லத்தில் மட்டும் ஏன் மகிழ்வே இல்லை? வெற்றி பெற்ற பாண்டிநாட்டிலா இந்தநிலை? அந்த இல்லத்திலே – திண்ணையின் ஓரத்தே தூணையடுத்து மாலை மாலையாகக் கண்ணீர் வடித்துக்கொண்டு உட்கார்ந்திருக்கும் அம்மங்கை யார்? ஏன் அவள் கண்களில் இந்தக் கண்ணீர் ?

எட்டாம் அத்தியாயம்

## பொன்முடி

அந்த அழகிய இல்லத்தில் திண்ணையில் அவள்–பொன்முடி ஏன் அழுகிறாள் ? அவள் வாழ்க்கை எப்போதுமே துன்பம் நிறைந்ததுதானா ? இன்பமே அவள் வாழ்க்கையில் இல்லையா ?



ஏன் இல்லை ? கொஞ்சம் பொன்முடியின் வாழ்க்கையிலே புகுந்து பார்க்கவேண்டும் நாம்.........

*

பொன்முடி பூம்புகாரிலே பிறந்த தமிழ்ப்பெண். அக்காலத்தில் பூம்புகார் சோழநாட்டின் தலைநகரமல்லவா ? தலைநகரத்தின் சிறப்புக்கா கேட்கவேண்டும் ? பொன்னிநாட்டைக் காக்கும் சோழர் அரண்மனையும் மாளிகைகளும் பிறவும் புகாருக்கே ஒரு அழகைக் கொடுத்து விளங்கின.

பட்டினப்பாக்கம், மருவூர்ப்பாக்கம் என்ற இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு விளங்கியது பூம்புகார், மருவூர்ப்பாக்கத்திலே வீரர் வீதியிலே நல்லானுக்குப் பெண்ணாகப் பிறந்தாள் பொன்முடி.

காவிரிப்பூம்பட்டினத்து வீதிகளிலே விளையாடினாள்– பருவம் அவளைப் பாவையாக்கிவிட்டது. காலப்போக்கில், மதுரையிலிருந்த மாவீரன் மருதநம்பிக்குப் பொன்முடியை மணம் முடித்தான் தந்தை நல்லான்.

மருதநம்பி மதுரையிலே பாண்டிய அரசியலில் படைவீரனாக இருந்தான்.

மருதநம்பிக்குப் பொன்முடி மனைவியானது ஒரு சுவையான நிகழ்ச்சி. அதைச் சொல்லாமல் இருக்க முடியுமா என்ன ?

ஐந்து ஆண்டுகளுக்கு முன் ஒருநாள், இளவேனிற்காலத்துத் தொடக்கம் அப்போது, மதுரையிலிருந்து ஏதோ அரசியல் காரணமாகப் பூம்புகார்க்கு வந்திருந்தான் மருதநம்பி.

சோழ அரண்மனைக்குச் சென்று திருமந்திர ஓலையைக் கண்டு, காரியங்களை முடித்துக்கொண்ட பிறகு, அகன்று விரிந்த வளவர் தலைநகர் வளங்கண்டுவர ஆசைகொண்டான் மருதநம்பி. சோழப்பெருநாட்டின் தலைநகரத்தைப்பற்றித் தன் பாட்டன் சொல்லக் கேட்டிருந்த அவனுக்கு, தன் இளமைக் காலத்தில் அப்பெருநகரத்தைத்தான் எப்போதாவது பார்க்க முடியுமா என்று ஏங்கியது நினைப்புக்கு வந்தது.

பட்டினப்பாக்கத்தின் அகல அகலமான இராசவீதிகளும், விண்ணை முட்டி எழும்பியிருந்த மாளிகைகளும், பிறவும் மருதநம்பியின் மனத்தை மகிழ்வித்தன. அழகான தன் வெண்புரவி மேலமர்ந்து காட்சிகளைக் கண்டு மகிழ்ந்து வந்துகொண்டிருந்த வேளையில்தான் எதிர்பாராத அந்தச் சம்பவம் நிகழ்ந்தது.

மருவூர்ப்பாக்கத்திலிருந்து பட்டினப்பாக்கத்தின் முக்கியமான இடம் ஒன்றைச் சேரும் மண்சாலை ஒன்றின் திருப்பம். கொஞ்சம் தொலைவில் இருந்த சிவன்கோயில் ஒன்றன் கோபுரத்தைக் கண்டு தொழுதுகொண்டு அதே எண்ணமாகச் சென்ற மருதநம்பியை ஒரு நிகழ்ச்சி திடுக்கிடவைத்தது.

"ஐயோ அப்பா! – என்று அலறும் ஒரு பெண்குரல். மருதநம்பி எதிரே நோக்கினன். தன் குதிரைக்கு முன்புறம் மூன்றடி தூரத்தில் ஒரு இளம் பெண் அச்சத்தோடு கீழே வீழ்ந்து கிடந்தாள்."

"என்னம்மா? பொன்முடி.........குதிரையைக் கண்டு பயந்துவிட்டாயா என்ன?" என்று கூறிக்கொண்டே ஓடி வந்து அவளைத் தொட்டுத் தூக்கினர் ஒரு முதியவர். யார் அவர்? யார் அந்த இளம் பெண்?.........

உடன் புரவியினின்று குதித்த மருதநம்பி அவ்விருவர் முன்பு ஓடி நின்றான்.

"ஐயா! என்ன நேர்ந்தது?" துடித்துக்கொண்டு கேட்ட மருதநம்பியின் வினா இது.

"தம்பீ! ஒன்றுமில்லை, இவள் இந்தக் குதிரையைக்கண்டு பயந்துவிட்டாள் போலிருக்கின்றது. இவள் என் மகள் பொன்முடி." பொன்முடியைக் கைப்பிடித்தான் – மாவீரன் மருதநம்பி.

"நீலமணி மிடற் றொருவன் போல
மன்னுக பெரும"

என்று, சிவனருளை முன்னிட்டு வாழ்த்தினர் செம்மைசான்ற பெரியோர்.

✱



பொன்முடி மருதநம்பி குடித்தனம் இனிமையாகத்தான் சென்றது......அதற்குள் பறம்புநாட்டுக்கும் பாண்டியநாட்டுக்கும் மூண்ட கொடும்போர்தான் அவர்கள் இன்ப வாழ்வுக்குத் தடையாய் முளைத்தது.

போரிலே-மனத்திலே தோன்றிய நப்பாசையால்-நாட்டைக் காட்டிக்கொடுக்க முற்பட்டான் மருதநம்பி. பறம்பு மன்னர் வீரவேளா நீதிக்கு மாறுபடுவார்?

வெஞ்சினம்கொண்ட வீரவேள் ஆணைப்படிப் பூங்காட்டு மண்டபத்தில் மருதநம்பி சிறைப்படுத்தப்பட்டதாகச் செய்தி தெரிந்தது. பொன்முடி புலம்பினள். புரண்டாள். அழுதாள். மாலை மாலையாய்க் கண்ணீர் வடித்தாள். மனம் சாம்பினள்.

மருதநம்பி மனம்மாறி, இளவரசன் பாரியின் உற்றதுணைவனாக மாறிவிட்டான் என்ற செய்தியைப் பொன்முடியினிடத்தில் சொல்லுவார் யார்?

எனவேதான் இங்கே மதுரையில் கண்ணீர் வடித்துக் கருத்தழிந்து, மாளிகையின் முன்வாயிலில் அமர்ந்திருக்கிறாள் பொன்முடி. **(தொடரும்)**

---

## புதையல் இருக்கும் இடம்

**முருகன்** எங்கே? எங்கே?

**அம்பலவாணன்** உன் நெற்றியில்.

**முரு** என் நெற்றியிலா?

**அம்** ஆம்! புருவங்களுக்கு இடையில் அங்கு இருக்கும் நாடியை நீ நாடிக் கண்டுகொள்ளவே நெற்றியில் பொட்டு வைக்கும்படி பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

**முரு** அப்படியானால், அந்தப் புதையலை மறக்காமல் அடையாளம் கண்டு கொள்வதற்காகவே தான் பொட்டு இடுவதா?

**அம்** ஆமாம்! பின்ன என்ன? நம் பெரியவர்கள் செய்துவைத்துள்ள ஏற்பாடுகள் சும்மா அழகுக்கு மட்டுமா?

மகளிர் பகுதி

# தமிழ் மகளிர் செய்தற்குரிய நற்பணிகள்

திருமதி. பா. முத்துலட்சுமி அவர்கள்
வித்துவான் இடைநிலை வகுப்பு, பல்கலைக்கல்லூரி, தருமபுரம்.

தொன்மைத் தமிழக மகளிரது ஈடும் எடுப்புமற்ற கற்பின் சிறப்பையும், வீரத்தின் உயர்வையும், அறப்பணிப் பெருமையையும்பற்றி நாம் அறியாததொன்றில்லை. அற்றைநாளில் தமிழ் மகளிரது வீரச்செயல்களையும், வாழ்க்கைப் பண்பாட்டையும் ஆய்ந்து அலசி, அதனை தம் நாட்டிடைப் பரப்பிப் புகழ்பெற்ற கிரேக்க, சீன, தூதுவ, யாத்ரீகர்களும், பௌத்த பிக்ஷுகளும் சாகாநினைவாய் அவ்வந்நாட்டு மக்கள் மனதிலும், நூல்களிலும் பதித்துவிட்டனர். என்ன வேற்றுமை! கண்ணகியின் கற்பைச் சிறப்பிக்கக் கோயில் கட்டினான் மலைநாட்டு மாவேந்தன். இன்று அவர்கள்நாட்டு மகளிர் நூற்றுக்கு எண்பதுசதவீதம், படித்துப் பட்டம்பெற்றுப் பணியாற்றிவருகின்றனர். அவர்களது அறிவை நாம் இன்று மேற்கோளாக எடுத்துக் கொள்ளவேண்டியிருக்கிறது. ஈன்று புறந்தந்து போருக்கு அனுப்பிய மறக்குலப் பெண்டிர் தம் வீரத்தை, பலதேயத்து கவிஞர்களும் தம் கவிகட்கிடைப் புகுத்தி மகிழ்வெய்துகின்றனர். ஆனால் இன்றைய தமிழகப் பெண்கள் வீரம், கூறவியலா அளவு குறைவுபட்டுக் கிடக்கிறது. இதற்கெல்லாம் மிக முக்கியமான காரணமாகிய அறியாமையை பெண்ணினத்தினின்று அகற்றுவதே மகளிரது முதன்மையான தொண்டாகும், சங்கமமர்ந்து கவிகள் பாடி சங்க நூல்களை யாத்த சங்கப் பெண்மணிகள் வாழ்ந்த காலமே நமக்குப் 'பொற்காலம்'. பொற்காலத்தைப் பின்பற்றிச் சிறப்புறத் தொண்டாற்றி நம் காலத்தை 'மணிக்கால'மாக்குவது நம் மகளிரது கடமையாகும்.

ஆண் - பெண் உறவில் இழிவை அறியாது உயர்வை உணர்ந்து நடந்தது அக்கால சமூகம். சாதி, சமயப் பூசல்களை ஒழித்து, எம்மதமும் சம்மதம் என்று வாழ்ந்துவந்த அச்சமூகத்திடை பெண்களது பெருமை, குன்றின் விளக்கெனப் பிரகாசித்தது. பண்டை சங்ககாலத்தில், அரசரும், குயவரும், பாணரும் வேறுபாடின்றி அறிவிற்கு உயர்வுகொடுத்த காரணத்தினுல்



தான் ஔவையும், நப்பசலையாரும், காக்கை பாடினியாரும், வெண்குயத்தியாரும், பொன்முடியாரும், பாண்டிமாதேவியும் ஒன்றுய்க் கலந்து சங்கப் பலகையில் அமரமுடிந்தது. இல்லறத்தின் நல்லறத் துறவி காரைக்காற் பேயாரும், கண்ணகியும், ஆண்டாளும், இல்லறத் தொண்டுகளை உலகிற்கு எடுத்துக் கண்முன் கொணர்ந்து இன்றைய தமிழ் மகள் ஒவ்வொருத்தியும், தங்கடனை செவ்வனே செய்தல் நற்பணியிலொன்று. சோழர்கால குந்தவையும் வானமாதேவியும் ஊக்குவித்து தம் கணவர்களை வீரச்செயல் செய்து புகழுறச் செய்ததுபோல் எல்லாவகைப் பணியிலும் தமதூக்கத்தை நல்மொழிகள் மூலம் கணவரிடம் செலுத்துவதும் நற்பணியே. ஔவையைப்போல் அவைப்புலவராய் அரசர்க்கு நீதி கூறுமளவு ஒவ்வொரு மகளிரும் நல்லறிவுபெற வழிதேடி, ஸ்ரீ விஜயலட்சுமிபண்டிட்டைப்போல் தம் ஆலோசனைகளை அகில உலகமுழுதும் ஏற்றுக்கொள்ளும் வகையில் ஆற்றல்பெறச் செய்வது தமிழ்மகளிரின் இணையற்ற தொண்டாகும். சேரன் செங்குட்டுவன் மனைவியைப்போல் கற்பின் உயர்வை உலகினுக்கு எடுத்துக்காட்டும்படி கணவனை கோயில்கட்டத் தூண்டியதுபோல் சமயப் பணிகளிலும், தெய்வவழிபாடுகளிலும் கணவனுடன் சமபங்குகொண்டு, ஊக்கம்தர மகளிர் முன்வரல்வேண்டும். மொழிப்பாகுபாட்டால் பிரிந்துதேயும்தமிழகத்தின் இன்றையநிலையில், தமிழ்மொழியின் தனிச்சிறப்பு குன்றுதநிலையில் தமிழ்மகளிர் பாதுகாத்துவரவேண்டும். அதற்கேற்ப, பிறந்து, மொழிபயின்று வளரும் சிறுவர்களை உடனிருந்து பேணி, உண்ணும்போதும், உறங்கும்போதும், ஆடும்போதும், பாடும்போதும் தாய்மொழியான தமிழின் சிறப்பினையே எண்ணி எண்ணிப் போற்றி வரும்படி செய்தல் வேண்டும். இன்றைய குழந்தைகளே நாட்டின் வருங்காலத் தலைவர்கள். வீரர்கள் என்ற எண்ணம் ஒவ்வொரு தாயின் மனதிலும் வேரூன்றி வளரவேண்டும். அவ்வளர்ச்சியின் பயனை அநுபவிக்கும் சிறுவர்கள் பிற்காலத்தில், அல்லது வருங்காலத்தில் கம்பனுகவும், ஔவையாகவும், தாகூராகவும் ஷேக்ஸ்பியராகவும், ஜான்ஸி ராணியாகவும், கியூரி அம்மையாகவும் இன்னும் பலவகையாலும் சிறப்புற்று விளங்குவார்கள்.

மங்கிக்கொண்டிருக்கும் பண்டைப் பழக்க வழக்கங்களைக் கடைப் பிடிப்பதோடு, சமய நல்லுணர்ச்சி, மறைய ஆரம்பித்துள்ள தெய்வ வழிபாடுகள், சமய சின்னங்களின்

உண்மைகள் இவைகளைச் செவ்வனே உணர்ந்து, தானும் தன் வழியாரும் நடப்பதற்கு ஆவன செய்தல்வேண்டும். முதலிலேயே சங்கத் தமிழ்க் கவிகளாகாவிடினும், சிறிது சிறிதாகத் தன் சுயநடையில் கவிகள் பாடவும், கதைகள் புனையவும் முயல வேண்டும். இன்றைக்கும் நம்மில்ல மூதாட்டிகள் தங்கள் சுய அறிவினால் சேர, சோழ, பாண்டிய வரலாறுகளையும், பிற நாட்டு விஷயங்களையும் தாலாட்டுக்களாகப் பாடிவருவதைக் காணுகிறோம். துயர மிகுதியால், தம் முன்னுள் குடும்ப நிலைகளையும் முன்னோரது அற, வீரப்பெருமைகளையும்பாடி 'ஒப்பாரி' வைத்து அழுவதையும் கேட்கிறோம். மேற்கூறிய பாடல்களிலுள்ள பிழைகளை நீக்கி, அக்கவிதைகள் போன்று இன்றும் செம்பாகமான நடையில் தமிழ்க் கவிகள் பாட மகளிர் முன்வர வேண்டும். பெண்ணிற் பெருந்தக்க யாவுள ?

---

## திருநாவுக்கரசு நாயனார் கீர்த்தனம்

இராகம் - ஆரபி] தாளம் - ஆதி

பல்லவி

ஆருக்குத்தான்கிடைக்கும் இவர்பெருமை
அம்மம்மாஇது அருமைஅருமை.

அநுபல்லவி

பாருக்குள்முனைப்பாடி நாட்டினில் வந்தார்
பத்தர்கள்கதிபெறத் தமிழ்மறை தந்தார் (ஆருக்)

சரணங்கள்

கற்றுணையாகவே கடலில் விழுந்தார்
சொற்றுணைவேதியன் சோதியென் றெழுந்தார்
பொற்றுணைஅடிகளை யெண்ணிய கழுந்தார்
மற்றினிப்பிறப்பெனுங் கடலில் அழுந்தார் (ஆருக்)
ஏமாந்தகபர சிவனெனு மன்றார்
இணையடிபணிந்தைந்து புலன்களை வென்றார்
நாமார்க்குங்குடி அல்லோம் என்றார்
நல்லசைவசமயத்தினில் நின்றார் (ஆருக்)
அப்பூதிவணங்கும் ஆனந்த அருளார்
ஐந்தெழுத்தைஉணர்ந்த போதநற் பொருளார்
எப்பூதலமும்தன் னடிதொழுந் தெருளார்
ஏத்தும்சுந்தரனுக்குக் கதிதர மருளார் (ஆருக்)

முத்து. சுந்தர முதலியார்.



சிறுவர் பகுதி

## பொய்யாம் உலகர் வாழ்வு

க.

கோழிக்குஞ்சு பாவம்!
கொன்றால் ஐயோ! நோவும்;
ஏழைச் சீவன் என்று
எண்ணி உள்ளம் கன்று!
தாயைச் சுற்றி ஆடி
ஓய்வில்லாமல் ஓடி
பாயும் இங்கும் அங்கும்,
பண்டம் கண்ட எங்கும்.

மலமும், சளியும், கண்டால்
மகிழ்ந்து கத்திக் கொண்டு
கலந்து கூடி நண்ணி,
'கபக், கபக்'கென் றுண்ணும்;
குப்பைக் கூளம் பார்த்தால்
குதூ கலமாய் ஆர்த்து
கப்பிச் சென்று கலைத்து
கவனங் கொண்டு அலைக்கும்.

உண்ணும் பொருள்கள் இருந்தால்
உவந்து பற்றி அருந்தும்;
பண்ணு கின்ற தில்லை
பாரில் எவர்க்கும் தொல்லை;
அச்சந் தந்து கருடன்
உச்சந் தன்னில் வரவும்
'குச்சு, குச்சு' என்று
கூவித் தாயை யொன்றும்.

கிட்டே ஓடி அழைக்கின்
எட்டி யோடிப் பழிக்கும்;
ஏனோ இங்கன் கையில்
தானே வாரா தையோ!;
"ஊனஞ் செய்யும் மனிதர்
தானோ உண்மைப் புனிதர்?"
துட்ட மக்கள் பொல்லர்
கெட்ட கையால் கொல்வர்

ஐயோ தப்பிப் பிழைப்போம்
பையத் தாயை அழைப்போம்
**பொய்யாம் உலகர் வாழ்வு**
மெய்யாய் நம்ம தாழ்வு!
நம் முடம்பின் சாற்றைத்
தம் வயிற்றில் ஊற்றி
பாழும் நாவில் சுவைக்கத்
தாமும் நம்மை யவிப்பர்;

ஊழும் இங்ஙன் ஆமோ?
பாழும் வயிறு சாமோ?
என்று மனமும் நொந்து
குன்றி கண்ணீர் சிந்தும்;
பாவம்! கோழி பதைக்கப்
பஞ்சைப் போன்ற சதைக்கு
நாவில் என்ன சுவையோ!
நமக் கென்னதான் நவையோ!





# கலையுலகம்

திரு. கை. முருகையாப்பிள்ளை அவர்கள் B. A., L. T.
தலைமையாசிரியர், தருமையாதீனக் கீழைக்கலை நடுநிலைப்பள்ளி

பேலூர் மைசூர் அரசாங்கத்தில் உள்ளது. மைசூரிலிருந்து அரிசிக்கீருக்குச் செல்லும் இரயில் பாதையில் உள்ள ஹாஸான் நிலயத்திலிருந்து 18 கல் தொலைவில் இருக்கிறது. மைசூர் ஒரு மலை நாடல்லவா? ஆகையால் பேலூர் கடல் மட்டத்திலிருந்து 3282 அடி உயரமுள்ள பிரதேசத்தில் அமைந்துள்ளது. சிறந்த சிற்ப வேலைப்பாடமைந்த ஒரு விஷ்ணுகோவில் உண்டு.

சுமார் 1000 ஆண்டுகளுக்குமுன் அது ஒரு சிறிய ஊராகவே இருந்தது. கி. பி. 1100க்குப் பிறகு ஹொய்சள வம்சத்தைச் சேர்ந்த முதல் வல்லாள அரசன் அதைத் தனது தலைநகராக்கிக் கொண்டான். அவனது சகோதரனது காலத்தில்தான் (1106) இராமானுஜாச்சாரியார் சோழ அரசனுக்குப் பயந்து கன்னட நாட்டுக்குச் சென்றது. அவ்வமயத்தில் சோழ அரசாங்கம் மிகப் பெரியது. மைசூர் நாட்டிலும் அது பரவியிருந்தது. அந்தக் கன்னடநாட்டின் பகுதிக்குத் 'தலைக்காடு' தலைநகரமாயிற்று. இராமநுஜர் சென்றதும் சோழனுக்கும் வல்லாளனுக்கும் பகைமையை மூட்டிவிட்டார். அதன்பலனாகத் தலைக்காடு கைமாறியது. சோழர்களும் தோற்றனர். அவ் வெற்றிச் சின்னமாகவே பேலூரில் விஜயநாராயணனுக்குக் கோயில் கட்டப்பட்டது.

சிறிது காலத்திற்குப்பின் தலைநகரம் பேலூருக்கு அருகிலுள்ள ஹலீபீட் என்ற இடத்துக்கு மாற்றப்பட்டது. அந்த இடத்தில் சிவன் கோயில் ஒன்று உள்ளது. அதன் சுவர்களில் ஈர்க்கில் குத்தவும் இடமில்லை என்றால் அது மிக உண்மை. ஏனெனில் அவ்வளவு அதிகமான - சிற்பங்கள் செதுக்கப் பட்டிருக்கின்றன. பின் மகம்மது துக்ளக் காலத்தில் அவரது சேனைத் தலைவனான கங்குசாலர் என்பவரால் பிடிக்கப்பட்டது. அவரது படையெடுப்பால் அந்தக் கோயில் மிகுந்த சேதமடைந்

துள்ளது. கொள்கையும் சமயமும் வேறாயிருந்தாலும், கலையுணர்வு எல்லோரிடத்தும் ஒன்று. அதுவாய்க்கப்பெறாதவர்கள் துருக்கிய சேனை வீரர்கள். வாகைசூடிய மதிமயக்கத்தால், முன்னிருப்பது எதிரி வீரர்கள் என்றுவாள் வீசுவதுபோல், உளி எடுத்து ஒவ்வொரு உருவத்தையும் உருக்குலைத்து இருக்கிறார்கள். கீழ் வரிசைகளிலும் வரிசைகளின் இடைவெளிகளிலும் உள்ள ஒவ்வொரு சிறு சிற்பமுங்கூட அவர்களது வெறியாட்டத்திற்குத் தப்பவில்லை. காலுடைந்ததும் கையொடிந்ததும், மூக்குச் சிதறடிக்கப்பட்டதும், பார்க்கின்றவர்களுக்கு மிகுந்த மனவேதனையை உண்டாக்குகின்றன. சமீபகாலத்தில் தான் புராதனச் சின்னங்கள் இலாகாவினால் பாதுகாக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

நல்ல வேளையாக பேலூரிலுள்ள சென்னகேசவர்கோயில் தப்பியுள்ளது. அதிலுள்ள சிற்பம் மிக மிக வியக்கத்தக்கது. சிற்பியின் கைத்திறனுக்குச் சான்றாக இன்றும் உள்ளன சில சிற்பங்கள். கோயில் நட்சத்திர வடிவம்போல் உள்ளது. முன் மண்டபத்தின் மேல்புறத்திலுள்ள சிற்பம் எவருடைய மனத்தையும் கவரக்கூடியது. வேலூர் பேலூர் என வழங்குகின்றது.

(தொடரும்)

---

## கட்டுரை அனுப்புவோர் கவனிக்க!

"ஞானசம்பந்தம்" இதழிற்குச் சமயச்சார்புள்ள கதை, கவிதை, கட்டுரைகள் அனுப்புவோர் நல்ல தாளில் இடையீடு இருக்குமாறு ஒரு பக்கத்திலேயே எழுதுதல் வேண்டும். இதழில் நான்கு பக்கங்களில் முடிவதாக இருத்தல் நல்லது. தக்கவற்றிற்கு ஊதியம் உண்டு. தொடர்கட்டுரை எழுதுவோர் இரண்டு இதழிற்குரியமுறையில் எழுதி அனுப்பும்படிக் கேட்டுக்கொள்கிறோம். வெளியிடப் பெறாதவற்றை மீண்டும் பெற விரும்புவோர் போதிய தபால் தலைகள் அனுப்ப வேண்டும்.

துணையாசிரியர்,
"ஞானசம்பந்தம்"
தருமபுரம், மாயூரம் P. O

# அரிது எது? (க)

வித்துவான்,
**ஸ்ரீமத் மாணிக்கவாசகத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**
கட்டளை விசாரணை, சீகாழி தேவஸ்தானம்.

பகல் எல்லாம் உலகோர்க்குப் பயன்பட்ட பகலவன், மாலை நேரத்திலே, மலைவாயிலில் விழுகின்ற நேரம். பழுத்த தமிழ் உள்ளம் படைத்த பெரியவர் ஒருவர் அந்நேரத்திலே, வீதி வழியே சென்றுகொண்டிருந்தார். கதிரவன், தன் கதிர்க்கிரணங்களை எல்லாம் ஒடுக்கிக்கொண்டு, தான் வந்தவழியே சென்றுகொண்டிருந்தானானாலும், இப்பெரியவருடைய சிந்தனைக் கதிர்கள் மட்டும் ஏனோ வளர்ந்துகொண்டே இருந்தன. நெடிது நினைந்தும், கடிதே விடைபெற இயலாத ஐயுறவு, கலக்கம். அந்தக் கலக்கமும், பின்வரும் தெளிவுக்கு அறிகுறிதானே? குழப்பநிலையில் மேற்கே சூரியன் மறைவதும், மறுநாட் காலை கிழக்கே மிகவும் விறுவிறுப்புடன் உதய சூரியனைத் தோன்றுவதற்குத்தானே! இவை எல்லாம் அவர் மனம் எண்ணித்தான் இருக்கவேண்டும். இல்லாவிடில், தம்மனத்தில் ஓர்வித ஐயத்தை உண்டாக்கிக் கொள்வாரா என்ன? யார் தம் ஐயத்தைப் போக்குவர் என்றே நடந்தார் நெடுந்தூரம். நடந்துகொண்டே இருந்தார். ஒருவரையும் காணப்பெறாமையால், கவியின் உள்ளம் கவலைகொண்டது. சிந்தனைமட்டும் செல்லாமல் இல்லை.

தாம் கருதிய துணைவராகத் தக்கவர் ஒருவர் எதிரே வரக் கண்டார். பெருமூச்செறிந்தார். இறையருள்பெற்ற கண்ணப்பரைப்போல, தம்மேலிருந்த பெரும்பாரம், தம்மை விட்டுக் கீழிறங்கியதாகத் தெரிந்தது இவருக்கு. எதிர்ப்பட்டவரைக் கண்டதும், பகலவனைக்கண்ட பனி என, தம் கவலைகள் எல்லாம் காற்றினும் கடிதாகிப் பறந்ததைக் கண்டார். ஆ ஆ! என்னபேறு! என்ன தவம் செய்தோம்! என்றுதான் எண்ணிற்று அவர் மனம். கலங்கிய அவர் மனம் தெளிவுற்றது. தாம்கண்ட ஐயத்தை யாரிடம் கேட்டுத் தெளிவுகொள்ள விரும்பினாரோ, அவரே எதிர்ப்பட்டுவிட்டார் என்றால், அவரது கலங்கிய உள்ளம் தெளிவுற்று மகிழ்ச்சிக்கடலில் மிதப்பதற்குக் கேட்கவாவேண்டும்! கவியுள்ளம் படைத்த அப்பெரியார், தாம்

கண்ட அளவில், "மன்னவர் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொங்க" விளங்கும் எதிர்ப்பட்டவரைப்பற்றிச் செவிவழிச் செய்தியளவில் தான், அறிந்திருந்தார். இப்போது அவரே ஆலால சுந்தரர் என்று தெள்ளத் தெரிந்துகொண்டார். "சென்ற காலத்தின் பழுதிலாத்திறமும் இனி எதிர்காலத்தின் சிறப்பும் இங்கு எழுந்தருளப்பெற்ற பேறீதனுல் இனி எற்றைக்கும் திருவருள் உடைமையோடு, என் ஐயுறவையும் தெரிவித்து முடிவைக்காணலாம் என்று சொல்லி வணங்கித் தமது ஐயத்தையும் கேட்க முற்பட்டார்.

நாடெலாம் புகழும் நம்பியே! ஞானபூமியாம் காழிமா நகரிலே குளக்கரையில் தம் தந்தையைக் காணுது அழுதபோது, உமையம்மை வழங்கியருளிய ஞானப்பாலைக் குடித்த ஞானக் குழந்தையான திருஞானசம்பந்தர், இறந்துபோன பூம்பாவை என்ற பெண் திலகத்தின் எலும்புகளில், பாமாலைசாத்தி அவைகளை அழகார் உருவும், ஆருயிரும் அடையும்படி மயிலையில் புரிந்த செயல் அரியதா? அல்லது சமணர் சார்ந்து பின் திருநீற்றுல் சைவம்சேர்ந்ததால் புல்லிய மனம்கொண்ட சமணர்களால் கடலில் கல்லோடுகட்டி வீழ்த்த, பின் "கற்றுணைப் பூட்டியோர் கடலினிற் பாய்ச்சினும் நற்றுணையாவது நமச்சிவாயவே" என்று பாடி, தாம் கரைசேர்ந்த திருநாவுக்கரசரின் சொல் அரியதா? அல்லது, எப்போதோ ஒருசமயம் குளத்தில் உள்ள முதலையால் விழுங்கப்பட்ட குழந்தையைப் பின் நெடுங்காலம் கழித்து, அப்பெற்றேர்களின் துன்பம்தீர, நீரோடு முதலையையும் வரவழைத்து வயதுக்கேற்ற வளர்ச்சியுடன் அம்முதலை வாயினின்றும் அக்குழந்தையை வெளிவரச்செய்த உம்முடைய செயல் அரியதா? இந்த ஐயத்தைத்தான் எனக்குப் போக்க வேண்டும். அதன்மூலம் என் மனம் பூரண அமைதி பெற வேண்டும் என்று சொல்லிமுடித்தார் புலவர் பெருமான்.

சுந்தரரின் செயல்தான் அரியது என்று புலவரது உள்ளம் முன்னரே முடிவுகட்டிவிட்டது. இருப்பினும், அவரையே கேட்டுத் தம் முடிவை உறுதிகொள்ள விரும்பினர். என்ன தான் ஆனுலும், இவர் கொண்ட முடிவிற்குக் காரணம் இல்லாமல் இல்லை. பெண் பூம்பாவையே உயிர்பெற்றெழுவதற்கு அவரது என்புகளும், நாவுக்கரசர் கடலில்மிதந்து கரை சேர்ந்ததற்குக்கல்லும் துணைப்பொருள்களாகஇருந்தன, அப்படியல்ல, இவரது (சுந்தரர்) செயலுக்கு. பாக்கள் பாடியவுடன் நீர் இல்லாத குளத்தில் நீர் நிரம்பியது. நீரில் முதலை வந்தது. எப்போதோ ஒருசமயம் அதனுல் உண்ணப்பட்ட குழந்தை, பூரணவனப்புடன், வயதுக்கேற்ற நிலையுடன் முதலை வாயினின்றும் வெளிவரச் செய்தது. இவையெல்லாம் நோக்கச் சுந்தரரது செயலே, அற்புதத்தினும் அற்புதமாக, அரிதினும் அரிதாக இருக்கிறது எனறெண்ணுகின்ருர். மூன்றில், அரியது எது? எனக் கேட்கிருர் புலவர், தம் எதிரில் நிற்கும் சுந்தரரைப் பார்த்து. இப்புலவர்தம் மாண்புதான் என்னே! அப்புலவர் தாம் யார் என அறியவேண்டாமா? புவியின் கவிஞர் போதரு நாவின் புகழின் செல்வர், நடுநிலையாளர், நாநிலம் போற்றும் பாநலம் பகன்றவர், சிவத்தைக்கண்ட சிவப்பிரகாசர், ஆமாம். அவரேதாம்.



என்ன! அவர் கொண்ட ஐயம் உங்களுக்குந்தானு? அப்படியானுல் இதோ தந்துவிடுகின்றேன் அவர் தம் அருந் தமிழ்ப் பாடலை.

"போதமுண்ட பிள்ளைஎன்பு பொருகண்மாது செய்ததோ?
காதல்கொண்டு சொல்லின்மன்னர் கல்மிதப்ப உய்த்ததோ?
வாய்திறந்து முதலைகக்க, மகனை நீ அழைத்ததோ?
யாது? நம்பி அரிது? நன்று எனக்கியம்ப வேண்டுமே"

பார்த்தீர்களா? இதில் உங்கள் முடிபு என்ன? (தொடரும்)

---

## சிறைச்சாலையில் சீவன்

சிறையில் கிடந்து சீரழிவோர் விடுதலையை விரும்புவது இயற்கை. அதற்கு மாருக!!!

உடம்பு – சிறைச்சாலை. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இவை – சிறைக் காவலாட்கள். உலகில் காணுகின்ற இன்ப துன்பம் சிறையில் பெறும்தண்டனை–உலகம்–தண்டனைபெறும்-இடம். இந்த ஒறுத்தலைக் குறைத்து உயிருக்கு விடுதலை அளித்து வீடளிக்கும் ஒருவன் இறைவன்.

குருஞானசம்பந்தர்.

# ஆவடி காங்கிரஸ் வைர விழா

திரு. மா. சுந்தர மூர்த்தி

வடநாடு தென்னாடு என்ற வேற்றுமைத் தீயினுக்கு ஒரு பெரிய கடல் நீராயிற்று. அயல் நாட்டார் இந்தியாவினிடத்தில் வைத்திருக்கும் நன்மதிப்பாகிய பயிர்க்கு அளவான மழையாயிருந்தது. வறியர் வாழ்விற்கு வழி காட்டும் செல்வத் துணையாய் உதவியது. இதுகாறும் நிகழ்த்திய எல்லா மாநாடுகளையும் சிறியன ஆக்கிப் பெருமைக்கு வரம்பாயிற்று. திருமுல்லைவாயிலில் எழுந்தருளியுள்ள முழுமுதலாகிய மாசிலாமணியின் திருவருளொளி உலகெலாம் வீசும் வண்ணம் உண்மைச்சான்றாய் விளங்கிற்று. அதற்குத் தக்கவாறே சத்தியமூர்த்தி என்னும் பெயரையும் எய்திற்று. ஆவடி பெரியோர் பலரை ஒருசேரப்பெறும் வாய்ப்புக்கு உரியதாகச் சென்னை மாநிலம் முழுவதும் செய்த தவத்தின் பெரு வடிவாயிருந்தது. தென்னாட்டார்க்கு விருந்தோம்புதல், நட்பு ஆளுதல், கைம்மாறு கருதாமல் தொண்டுபுரிதல், உண்மையாக உழைத்தல், பண்பட்ட நலம் முதலியவை இயற்கையாயுண்டு என்று மற்றை நாட்டார் அனைவரும் அறியச்செய்யும் பெரியதொரு வெளியீடு போலிருந்தது. 'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு' என்று, அன்றுசொன்ன உண்மை இன்று வெளிப்பட்டது. உலகெலாம் உற்ற ஒற்றுமையின் உயரிய வடிவம் இது என்றால் மிகை ஆகாது. முதலமைச்சர் திரு. காமராஜர் (விருப்பிற்குரிய மன்னர்) அவர்கள் எல்லாநாட்டாராலும் விரும்பப்பெறும் காமராஜரேயாக ஒளிசெய்யும் ஒரு செஞ்ஞாயிறு ஆயிற்று. அவரது பெருந்திறனும் துணைவர் பலரையும் தழுவிப் பயன்பெறச் செய்யும் பேராற்றலும் ஆகிய விளக்குகள் நின்று ஒளிரும் உயர்ந்தோங்கிய மலையாயிற்று. வணிகர்க்கு ஒரு பெரிய வாழ்வு. அறிஞர்க்குத் தக்கதொரு நற்காலம். தொண்டர் பலர்க்கும் என்றும் கிடைக்காத பேரநுபவம். காவற்படைஞர்க்குத் தம் வாணாளில் என்றும் காணாத மெய்ப்பணி. வேறு பலர்க்குப் பலவேறு பேறுகள்.



ஆவடி வைரவிழாவால் நல்லோர் பலருடைய வாழ்த்துக்களும் நம் நாட்டிற்கு ஒருசேரக் கிடைத்த நம் பாக்கியமே பாக்கியம். காங்கிரஸ் மகாசபையின் அளவிலாத யோக்கியமே வைரவிழா. அதற்குக் கைத்தாயாகி இலங்கிய காந்தியடிகளது கருமயோகத்தின் பயனே இவ்விழா. சுதந்திரதாகம் அடங்கிப் பல ஆண்டுகள் சென்றும், அதற்கென்றே தோன்றிப் பெருகிய தியாகவுணர்ச்சியும் ஊக்கமும் வளர்ந்துவந்தன. அதனால், அம் மகாசபையை, திருமுல்லைவாயிலில் ஓங்கிய திருக்கோயில் வீசிய அருளானது, எல்லோரும் இன்புற்று வாழும் புதியதோர் உருவத்தில்மாற்றித்தடுத்தாட்கொண்டது.

இவ்வைரவிழா காந்தியடிகளைப் பெறவில்லையே என்ற என்ற ஒன்றே குறையாகத் தோன்றலாம். ஆனாலும் நம் காந்தியடிகளின் ஆவி இன்றும் இந்தியர் உள்ளக் கண்ணுக்கு எதிரே உலாவிக்கொண்டிருப்பதை உணர்ந்தவர்க்கு அது குறைவிலா நிறைவே. எல்லாம் திருவருட்செயல். இதனை நினைந்து, தருமபுர ஆதீனம் இருபத்தைந்தாவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள், இப்பெரிய உலகப் பொது அரங்கில் உலகப் பொது மொழியான *ஆங்கிலத்தில், ஒரு மலரை வெளியிடச் செய்தருளினார்கள். அது பல ராஜ்யங்களிலிருந்தும் வந்த பெரியோர் எல்லோர்க்கும் வழங்கலாயிற்று. ஆகவே, எளிதாகச் சமயப் பிரசாரம் செய்யும் ஒரு பெரிய வாய்ப்புக்கும் துணையாயிற்று. நல்ல தியாகிகள் பலர் கூடித் தொடங்கிய இக்காங்கிரஸ் மகாசபை எல்லோர்க்கும் எக்காலத்தும் எல்லா நலங்களையும் விளைக்கும். இது முக்காலும் உண்மையாகும். அதற்கு ஆவடி காங்கிரஸே சான்று. வாழ்க காங்கிரஸ் மகாசபை. வாழ்க தமிழ்நாடு. வாழ்க பரத கண்டம். வாழ்க உலகெலாம். வளர்க உலகமைதி. வெல்க சத்தியம். நிறைக அஹிம்ஸா. முதலமைச்சர் திரு. காமராஜர் அவர்கள் நீடுவாழ்க.

---

*SAIVA SIDDHANTHAM (The cream of South Indian Thought) Published under orders of His Holiness Subramania Desika Gnanasambanda Paramacharya Swamigal Avl., 25th in the Holy line of Dharmapuram Adhinam.

# நம் செய்திகள்

'விசாகு'

### ஸ்ரீ ஆனந்தபரவசதேசிக சுவாமிகள் குருபூசை விழா

தருமபுர ஆதீன இரண்டாவது குருமுதல்வர் ஸ்ரீலஸ்ரீ ஆனந்தபரவச தேசிகர். முதற்குரவர் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தரிடம் உபதேசம்பெற்று பெற்ற சிறு பொழுதில் ஜீவசமாதியாகி ஸ்ரீ குருஞானசம்பந்தர் கோயிலுக்கு மேற்கே அவர்கள் ஆலயத்தின் சிகரத்தைத் தரிசித்தவாறே ஐக்கியமான தவமுதல்வர். "ஆனந்த பரவசனைக்கண்டுங்கண்டே அந்தோ பரகதியை அடைந்தீரில்லை" என அவர்கள் நிலையைப் பின் எழுந்தருளிவந்த ஆசாரியர்களால் பாராட்டப் பெறும். தகுதியைப் பெற்றவர்கள். அவர்கள் ஜீவ சமாதி அடைந்த நாள் ஜய ஆண்டு மார்கழித்திங்கள் 11—1—55 செவ்வாய்க்கிழமையாகும்.

ஆனந்தபரவச தேசிக மூர்த்திகளிடம் அளவிறந்த அன்பும் பக்தியும் கொண்டவர்கள் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள். அவர்கள் பக்திக்கு எடுத்துக்காட்டாக இலங்குவது ஆனந்த பரவசரின் வானமளாவிய கோயில்.

11—1—55 காலை $8\frac{1}{2}$-மணிக்கு அபிஷேக ஆராதனைகள் சிறப்பாக நடைபெற்றன. நிவேதித்த பொருள்கள் குழந்தைகட்கு வழங்கப்பெற்றன. காலை 9-மணி முதல் ஆலயத்தின் எதிரில் அமைக்கப்பெற்ற கொட்டகையில் திருமுறை மாநாடு நடைபெற்றது. ஆதீனத் திருக்கூட்டத்து அடியார்களும் ஆதீனக் கல்லூரி ஆசிரியர்களும் மாநாட்டில் கலந்துகொண்டு சொற்பொழிவாற்றினர்.

### சொற்பொழிவுகள்

ஆதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் வித்துவான், திரு. முத்து. சு. மாணிக்கவாசகமுதலியார் அவர்கள், 'திருவடி', சீகாழி கட்டளை விசாரணை வித்துவான், ஸ்ரீமத் மாணிக்கவாசகத்தம்பிரான் சுவாமிகள் 'திருவருள்', திருக்கடவூர் கட்டளை விசாரணை வித்துவான், ஸ்ரீமத், சுவாமிநாதத்தம்பிரான் சுவாமிகள் 'குருவருள்', மாயூரம் – குமரக்கட்டளை, கட்டளை விசாரணை ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் 'அன்பும் அருளும்', கல்லூரித் தமிழ் விரிவுரையாளர்கள் வித்துவான், திரு. வி. சா. குருசாமி 'ஐந்தெழுத்தும் அடியாரும்', வித்துவான், திரு. சொ. சிங்காரவேலன் 'திருநீறும் சேரமான் பெருமாளும்', ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர்கள் ஸ்ரீ சட்டைநாதக்குட்டி 'முப்பொருளும் மூர்த்திநாயனாரும்', ஸ்ரீ குமாரசாமிக்குட்டி 'அடியார் பெற்றி', குறுக்கை தேவஸ்தானம் கட்டளைவிசாரணை ஸ்ரீமத் முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் 'முத்தி', பண்டித திரு. அ. கந்தசாமிப்பிள்ளை அவர்கள் 'செங்கதிரவன்', ஆதீன சமயத்தொண்டர், திரு. கோ. சிவஞானம் அவர்கள் 'ஏமாப்போம்'. இம்முறையில் சொற்பொழிவுகள் மாலை மணி 6 வரை நடைபெற்றது.

### இசை நிகழ்ச்சி

வேளூர் தேவஸ்தானம் தேவார வகுப்பு ஆசிரியர் திரு சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் இசைப்பயிற்சியிலும், தேவாரத்திலும் நல்ல தகுதி பெற்றவர். சிறந்த சாகித்தியங்களும் இயற்றி வருபவர். அன்னார் மாலை 6 மணிமுதல் இசையரங்கு நிகழ்த்தினார். ஆதீன இசைக்கல்லூரித் தலைமையாசிரியர் திரு. T. S. சம்பந்தம் பிள்ளை அவர்களும் இசைக் கல்லூரி மிருதங்க ஆசிரியர் திரு. R. விசுவநாதய்யர் அவர்களும் இசைத்துணைக் கருவிகள் வாசித்தனர்.

### வெளியீடு (திருவெம்பாவை தெளிவுரை)

திரு. கீ. இராமலிங்க முதலியார் அவர்களால் எழுதப் பெற்றது. இந்நூல் கன்னிப்பெண்கள் காலையில் எழுந்து ஒருவரை ஒருவர் துயில் எழுப்பி நீராடலைப்பற்றியதென்பதை உரையாடல்மூலம் ஆசிரியர் நன்கு விளக்கியுள்ளார்.

திருவெம்பாவையை எளிதில் புரிந்துகொள்ளும் நிலையில் இதுவரை உரை எழுதி யாரும் வெளியிட்டிலர். திருவெம்பாவையைப்பற்றி நாடெங்கணும் உணர ஆரம்பித்திருக்கும் இந்த நல்லநேரத்தில் இத்தகைய தெளிவுரை நல்லபயனளிக்கும் என்ற நோக்கத்தோடு இத்தெளிவுரையை ஆதீனக் கல்லூரி மாற்றும் முதல்வர் திரு. கீ. இராமலிங்க முதலியார் எம். ஏ.,

அவர்களைக்கொண்டு எழுதுவித்து வெளியிடப்பெற்றது. இந் நூல் ஸ்ரீ ஆனந்தபரவச தேசிக சுவாமிகள் குருபூசை விழா மலராக வெளிவந்துள்ளது.

### வழிபாடு

இரவு 9 மணிக்கு ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடியற்றினர்கள். மாயூரத்திலிருந்தும் மற்றும் பல ஊர்களிலிருந்தும் அன்பர்கள் வந்து தரிசித்து ஆனந்தமுற்றனர். விழா மலர் வழங்கப்பெற்றது.

## பெரியோர் வருகை

சென்னை மாநிலக்கல்வி இலாகா டெப்டி டைரக்டர் திருவாளர் ரெங்கநாயகலு அவர்களும், தஞ்சைமாவட்டக் கல்விநிலையக் கண்காணிப்பாளர் திரு. ரெயான் அவர்களும், திரு. மோகனரங்கம் அவர்களும் ஆதீனத்திற்கு வந்து ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களைத் தரிசித்தார்கள். கல்விநிலையங்களையும் பார்வையிட்டார்கள்.

## ஜென்மநக்ஷத்திர அபிஷேக ஆராதனை

தருமபுர ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் மாத ஜென்மநக்ஷத்திர நாட்களில் திருப்பதிகம் பெற்ற சிவ ஸ்தலங்கள் தோறும் அபிஷே ஆராதனைகள் செய்துவரும் வழக்கம்போல் இம்மாதத்திலும் 11—2—55 வெள்ளிக்கிழமை திரு அவளிவணல்லூர் ஸ்ரீ சாட்சிநாதப்பெருமான் சுவாமி சிவாலய மகாகும்பாபிஷேக நாளன்று அபிஷேக ஆராதனைகள் ஆதீனச் சார்பில் செய்விக்கப்பெறும். திரு அவளிவணல்லூர்த் தேவாரத் திருப்பதிகங்கள் ஆதீன வெளியீடாக வெளிவரும். 11—2—55 வெள்ளிக்கிழமையன்று நடைபெறும் மகாகும்பாபிஷேகத்தை ஒட்டி, திருமுறை மாநாடு நடத்த ஏற்பாடுகள் செய்யப்பெற்றுள்ளன. சுவாமி அம்பாளுக்கு பஞ்சமுகார்ச்சனை நவசக்தி அர்ச்சனையும் நடைபெறும்.

## திருவெம்பாவை மாநாடுகள்

### விளநகரில்

7—1—55 வெள்ளிக்கிழமை மாலை 3 மணிமுதல் ஆதீனத்துக்குச் சொந்தமான விளநகர் ஸ்ரீ துறைகாட்டும் வள்ளலார் சுவாமி கோயிலில் திருவெம்பாவை மாநாடு நடைபெற்றது. ஆதீனத் திருக்கூட்டத்து அடியார்கள், ஸ்ரீ சண்முக சுவாமிகள் ஸ்ரீ சட்டைநாத சுவாமிகள், ஸ்ரீ குமாரசுவாமி சுவாமிகள், குறுக்கை தேவஸ்தானம் கட்டளை விசாரணை ஸ்ரீமத் முத்துக் குமாரசாமித்தம்பிரான் சுவாமிகள் அவர்கள், ஆதீனத் தேவார பாடசாலை ஆசிரியர் திரு. R. வேலாயுத ஓதுவார் அவர்கள் ஆகியோர் கலந்துகொண்டு சொற்பொழிவாற்றினர். ஆதீனக் கல்லூரி மாணவர், திருஞானசம்பந்தமும் ஆகம பாடசாலை மாணவர், S. கிருஷ்ணமூர்த்தியும் பேசினர். திரு. முத்தையாச் செட்டியார் அவர்கள் நன்றியுரைகூறினர்.

### ஆச்சாள்புரத்தில்

12—1—55 ஆச்சாள்புரம் ஸ்ரீ சிவலோகத்தியாகராஜ சுவாமி தேவஸ்தானத்தில் திருவெம்பாவை மாநாடு நடைபெற்றது. ஆதீனத் திருக்கூட்டத்து அடியார்களும், ஆதீனக் கல்லூரி ஆசிரியர்களும் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றினர். எல்லோரும் திருஞானசம்பந்தர் ஆலயத்திலிருந்து புறப்பட்டு முறையேவழிபாடுதொடங்கினர்கள். தேவஸ்தானம் சூப்பரின்டென்டெண்ட் திரு. வைத்திலிங்கம் பிள்ளை அவர்கள் அனைவரையும் வரவேற்று மிகச்சிறப்புடன் உபசரித்தார்கள்.

## லக்ஷார்ச்சனை பூர்த்தி

ஆதீனத்துக்குச் சொந்தமான குத்தாலம் ஸ்ரீ உக்தவேதீஸ்வரர் ஆலயத்தில் நடைபெற்றுவந்த லக்ஷார்ச்சனை 10—1—55 திங்கட்கிழமை முடிவுற்றது. அன்று மாலை 6 மணி முதல் சொற்பொழிவுகள் நடைபெற்றன. மாயூரம் - குமரக்கட்டளை கட்டளை விசாரணை ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள், அவர்கள் ஆதீனக் கல்லூரி மாற்றும் முதல்வர் திரு. கே. இராமலிங்க முதலியார் எம். ஏ., அவர்கள், ஆதீனக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், புலவர், திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள், ஆதீனக் கீழைக்கலை நடுநிலைப்பள்ளித் தலைமையாசிரியர் திரு. K. முருகையாப் பிள்ளை B.A., L.T., அவர்கள் ஷெ பள்ளித் தமிழாசிரியர் வித்துவான், திரு. V. சபேசனவர்கள் ஆகியோர் பேசினர்.

## வேளூரில் சொற்பொழிவு

ஆதீனத்துக்குச் சொந்தமான புள்ளிருக்கு வேளூர் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி உற்சவத்தில் 30—1—55 ஞாயிறுமுதல் 8—2—55 செவ்வாய்க்கிழமை முடிய சமயச் சொற்பொழிவுகள் நடைபெற்று வருகிறது. 30, 31—1—55 இருநாட்களிலும் திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான் திரு. K. ஆறுமுக நாவலர் அவர்கள் 'தொண்டன்' ஆசிரியர் நாகர்கோயில் 'அரிமுகன்கண்ட அறுமுகன்', 'வள்ளியம்மை திருமணம்' என்பனபற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். 31—1—55 திங்கள் அன்று பண்டித திரு. அ. கந்தசாமிப் பிள்ளை அவர்கள் 'புள்ளிருக்கு வேளூர்க் கலம்பகம்' பற்றி விரிவுரையாற்றினார்கள். இரவு 7 மணிமுதல் கானகலாதர மதுரை திரு. மணி அய்யர் அவர்கள் குழுவினர் இன்னிசை நடைபெற்றது. ஆதீன இசைக்கல்லூரித் தலைமையாசிரியர் திரு. T. S. சம்பந்தம் பிள்ளை அவர்கள் பிடில். ஆதீன இசைக் கல்லூரி மிருதங்க ஆசிரியர் குத்தாலம் திரு. R. விஸ்வநாத அய்யர் அவர்கள் மிருதங்கம் வாசித்துச் சிறப்பித்தனர்.

## வேளூரில் பிரமோற்சவம்

தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான புள்ளிருக்கு வேளூர் ஸ்ரீ வாலாம்பிகா சமேத ஸ்ரீ வைத்தியநாதஸ்வாமி தேவஸ்தானத்தில் ஜய ஆண்டு தைமீ 8உ முதல் திருவிழா தொடங்கி நடைபெறுகிறது. ஸ்ரீ கற்பக கணேசர், ஸ்ரீ செல்வ முத்துக்குமாரசுவாமி, ஸ்ரீ மகாசாஸ்தா, ஸ்ரீ பத்ரகாளிஅம்மன், ஸ்ரீ சந்திரசேகரர் திருவிழாக்களும், ஸ்ரீ வாலாம்பிகா சமேத ஸ்ரீ வைத்தியநாத சுவாமிக்குப் பெரிய திருவிழாவும் நடைபெறும். 20-1-55 முதல் தொடங்கித் திருவிழாக்கள் 5-4-55 அன்றுவரை நடைபெறும். 18—4—55 சனிக்கிழமை மண்டலாபிஷேகத்திருநாள்.

ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி திருவிழா நாட்களில் (30—1—55 ஞாயிறு முதல் 8—2—55 முடிய) சமயச் சொற்பொழிவுகளும் இன்னிசை நிகழ்ச்சிகளும் அமைக்கப்பெற்று உள்ளன.

## *பெரியபுராண விரிவுரை-4

பெருஞ்சொல் விளக்கனர்,
திரு. அ. மு. சரவண முதலியார் அவர்கள்

### தில்லைத் தெரிசனம்

"நாயேன் யாதினையறிந்து என் சொல்லிப் பாடுகேன்" என்று நம்பியாரூரர் கேட்கப் "பித்தனென்றே பாடுவாய்" என்று இறைவன் அடியெடுத்துக் கொடுக்க, "பித்தா பிறைசூடி' என வரும் பாடலை முதன்முதல் சுந்தரர் அருளிச்செய்தார்.

பாற் கடலில் தோன்றிய அமுதம் குறைபாடுடையது, அது தன்னை உண்டார்க்கு மெய்ஞ்ஞானத்தையளிக்கவில்லை. இறப்பையுந் தடுக்கவில்லை. ஆனால் இறைவனாகிய அமிர்தம் பேரின்பத்தை யளித்து மரணமிலாப் பெருவாழ்வையும் அருளு மாதலால் "உணர்வு தந்து உய்யக்கொண்ட கோதிலா அமுதே" என்பதாகக் கூறினர்.

இறைவன் நிர்க்குணனுயிற்றே! குணப்பெருங்கடல் என்று கூறியது என்னையெனின் மாயா சம்பந்தப்பட்ட முக்குணங் களும் இறைவனுக்கு இல்லை என்ற பொருளே தவிர குணமே இல்லையென்பதல்ல. இறைவன் எண் குணத்தனுவான்.

சுந்தரர் 'நாயேன்' என்று பல விடங்களில் (26 இடங்கள்) தன்னைக் குறிப்பிட்டுள்ளார். தான் பாடிய முதற் பதிகம் 2-ம் பாடலில் 'நாயேன் பலநாளும்" என்று ஆரம்பிக்கின்றார். முடிவில்பாடிய நொடித்தான் மலைப் பதிகத்து முதற் பாடலாலும் தன்னை நாயேன் என்று குறிப்பிடுகின்றார். (நாவுக்கரசர் 87 இடங்களிலும், மாணிக்கவாசகர் 59 இடங்களிலும் தங்களை நாயேன் என்று குறிப்பிட்டுள்ளார்கள்) இவ்வாறு பெரியோர் களெல்லாம் தங்களை நாயேன் என்று குறிப்பிடுவதற்குரிய அடிப்படை யாது? எக்காரணம் பற்றியும் தங்களை எண்ணத் தாலும் பெரியவர்கள் என்று கருதாதவர்கள் எவரோ அவர்களே

---

* தருமபுர ஆதீனம் திருச்சி மௌனமடம் கட்டளையின் சார்பில் 19—12—1954 இல் நிகழ்ந்த சொற்பொழிவு.

பெரியோர்கள் என்று பேசப்படுபவர்களாவார். அவர்கள் எப்பொழுதும் தங்களைத் தாழ்த்தியே கூறுவது இயல்பு "யாவர்க்குமேலாமளவிலாச் சீருடையான் யாவர்க்குங் கீழா மடியேன்" என்று மணிவாசகர் கூறுவதைக் கவனிக்க. "தாழ்ந்தோர் உயர்வரென்றும் மிகவுயர்ந்தோர் தாழ்வரென்றும் அறஞ் சூழ்ந்தோர் உரைக்கும் உரை" என்பது சிவப்பிரகாசர் கூற்று. தம்மைத் தாழ்த்திக்கொள்வோர் பிறரால் உயர்த்தப் படுவார் என்பதும் தம்மை உயர்த்திக் கொள்வோர் பிறரால் தாழ்த்தப்படுவார் என்பதும் இதன் கருத்து. அங்ஙனம் தாழ்த்திக் கூறுவார் நாயேன் என்று தங்களைக் கூறுவது நாயினிடத்துள்ள உண்டதையே கக்கி உண்ணுவதும் குறிக் கோளிலாது ஓடித்திரிவதும் ஆகிய இழிகுணங்களைக் கருதியே.

'நாயிற் கடையேன்' என்று மணிவாசகர் பல விடங்களில் தம்மைக் கூறிக்கொண்டது நாயினிடத்துள்ள ஒருசில நற் குணங்களும் தம்பாலில்லை என்று தம்மைத் தாழ்த்தி உரைத்த தாகும். நாயினிடத்துள்ள நற்குணங்களாவன, ஒரு பிடி அன்னமிட்டாரை உயிருள்ளளவும் மறக்காத நன்றியறிதலும், தன் தலைவன் எவ்வளவு கூட்டத்திலிருப்பினும் அவனை யறிந்து கொள்ளுந்திறனும், இட்டகட்டளையை இடரேவரினும் உடனே நிறைவேற்றுமுள்ளமும், கோபத்தால் ஒருவேளை தன் தலைவன் ஊறு விளைவிப்பானுயினும் வாலைக்குழைத்து நன்றியே காட்டு வதும் முதலியன. மேலும் நாய் தனக்கு ஊறுசெய்த பொருளைக் (கல், கம்பு முதலியன) குறித்து வருந்தாது அவற்ருல் ஊறு விளைவித்த மாற்ருரையே கோபிக்கும். (ஆனுல் மனிதர்கள் தமக்குத் துன்பம் நேர்ந்தால் அது தங்கள் வினை வயத்தால் என்பதைக் கருதாது துன்பம் செய்தாரை ஒறுப்பார்கள்).

ஞானசம்பந்தர், நாவுக்கரசர் ஆகிய இருவர் தேவாரங்களி லும், திருக்குறளிலும் ஊறித் திளைத்தவர் நமது சுந்தரர். இது அவரது பாடல்களால் நன்கு அறியப்படுகின்றது. (இதற்குப் பல மேற்கோள்கள் காட்டப்பட்டன) "அளவில் தொல் கலை களாய்ந்து" என்ற தொடர் (தடுத்-6) இதனையே குறிப்பிடு கின்றது. 'பித்தா' என்றதும் 'பிறைசூடி' என்று சுந்தரர் பாடத் தொடங்கியதும் ஞானசம்பந்தர் தேவாரத்தில் தாம் திளைத்திருந்ததே. விண்ணோர் பெருமானே விகிர்தா விடையேறி பெண்ணுண் அலியாகும் "பித்தா பிறைசூடி" என்பது ஞான சம்பந்தர் வாக்கு.



தடுத்தாட்கொண்டதற்பின் சுந்தரர், இறைவன் திருக் கோவில் கொண்டு எழுந்தருளிய பல திருத்தலங்களையும் தரிசிக்கக்கருதித் திருநாவலூர் திருத்துறையூர் முதலிய தலங் கள் சென்று பதிகம்பாடித் தில்லையைத் தெரிசிக்க விரும்பிப் புறப்பட்டார். வழியில் திருவதிகைக்கு அருகில் வந்ததும் அப்பதி நாவுக்கரசர் உழவாரத் திருப்பணி செய்யப்பெற்ற தலமாதலால் அதனை மிதித்துச்செல்ல விரும்பாது அருகிலுள்ள சித்தவடம் என்னும் மடத்தில்தங்கினுர். திருவதிகை வீரட்டானேசுவர ரைச்சிந்தையிற் கொண்டவராய் உடன் வந்த அடியார்களோடு ஆங்குத் துயில் கொள்ளும்போழ்து இறைவன் முதிய அந்தணர் வடிவங்கொண்டு ஒருவரும் அறியாது உட்சென்று நம்பிகள் தலையில் திருவடி படும்படியாக வைத்துத் துயில்கொள்வார் போன்றிருந்தார். சுந்தரர் விழித்து "அருமறையோய்! உன் னடிகளை என்றலைமேல் வைத்தனையே" என்று கேட்க "திசை யறியாது காலை வைத்தது என் மூப்பினுல் நேர்ந்தது" என்று முதியவர் கூறினுர். பின்னர் சுந்தரர் மற்ருேரிடத்தில் தூங்க அங்கும் தம் திருவடியை நீட்ட, சுந்தரர் "இங்கென்னைப் பல காலும் மிதித்த நீ யார்?" என்று கேட்க "அறிந்திலையோ" என்றி கூறி மறைந்தார்.

வேண்டுமென்றே பலதடவைகள் குற்றம் செய்வார்மீது கோபம் கொள்வது நம்மவர்கள் இயல்பு. ஆனுல் சுந்தரர் நமது கோபம் பலிக்குமிடமே எனினும் கோபம்கொள்ளாது "மிதித்த நீயார்?" என்று கேட்டார். இது அவரது பொறுமையின் எல்லையைக் காட்டுவதாகும். "செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக் காக்கிலென் காவாக்காலென்" என்ற குறள் ஈண்டு நினைவுறத்தக்கது "மிதித்தனை நீ யார்?" என்று பிற்காலத்தில் பதிப்பித்துள்ளனர். அவ்வாறிருப்பின் மிதித்ததனுல் சினம் உண்டாகி அதுகாரணமாக வினவினுர் என்று பொருள்கொள்ள நேரும். அது சுந்தரரது பொறு மையைக் காட்டாது. சுந்தரர் "நுணங்கிய கேள்விமேலோன் (தடுத்-14) என்பது சேக்கிழார்வாக்கு. ஆதலால் இவர்வாயினின் றும் வணங்கிய மொழியே வருதல் திண்ணம். எனவே சுந்தரர் சினம் கொண்டாரில்லை என்பது, உறுதிசெய்யப்பெறுகிறது. தமது முடியில் திருவடியை வைத்தருளியவர் சிவபெருமானே என்பதை யறிந்த சுந்தரர், வருந்தித் "தம்மானை யறியாத சாதியார் உளரே" என்ற திருப்பதிகம்பாடி அங்கிருந்து

அகன்று திருமாணிகுழி, திருத்திணைநகர் முதலிய தலங்களை வணங்கிப் பதிகம் பாடித் தில்லையை அடைந்தார். ஈண்டு, கனகசபையில் ஆடும் பெருமானை ஐம்பொறிகளின் அறிவெலாம் கண்களே கொள்ளவும், கரணங்கள் நான்கும் சிந்தையே யாகவும், குணமொரு மூன்றும் திருந்து சாத்துவிகமேயாகவும் ஒன்றி நின்று வழிபட்டு மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்து "இறைவனே, மண்ணிலே வந்து உன்றன் திருநடம் கும்பிடப்பெற்ற பிறவியே எனக்கு இன்பந்தருவதாயிற்று" என்று பதிகம் பாடிப்பணிந்தார்.

"உன்றன் திருநடம் கும்பிடப்பெற்று மண்ணிலே வந்த பிறவியே" என்பதை "மண்ணிலே வந்து, உன்றன் திருநடம் கும்பிடப்பெற்ற பிறவியே" என்று விகுதி பிரித்துக்காட்டல் வேண்டும்.

மண்ணிலே தோன்றும்படி பணித்தருளியதும் மானிடப் பிறப்பை எண்ணிக் கலங்கிய சுந்தரர் தில்லை நாயகன் திருக் கூத்துக் கும்பிடப்பெற்றதால் அப்பிறவியே சிறந்ததாயிற்று என்று குறிப்பிடுகின்றார். "இனித்தமுடைய எடுத்தபொற்பாதமும் காணப்பெற்றால், மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம் மாநிலத்தே" என்பது நாவுக்கரசர் வாக்கு. இங்குப் பிறப்பாகிய கருவி எதற்காக இறைவனால் கொடுக்கப்பட்டதோ அதற்குரிய செயலில் அது பயன்படும்போது போற்றப்படுவதும் அதற்கு மாறான செயலில் பயன்படும்போது தூற்றப்படுவதும் பெரியோர்களுடைய வாக்கில் வைத்துக்காணலாம். "என்னை வகுத்திலையேல் இடும்பைக்கு இடம் யாது சொல்லே" என்று அருளிய நாவுக்கரசர் மேலேகாட்டிய "மனித்தப் பிறவியும் வேண்டுவதே" என்று கூறியருளியதோடு "இன்னம் பாலிக்குமோ இப்பிறவியே" என்றும் "வாய்த்தது நம்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்"? என்று பாடியதும் மேற்காட்டியதற்குச் சான்றாகும்.

தில்லைத்தெரிசனம் எத்துணைச் சிறப்புடையது என்பதைக் குமரகுருபரசுவாமிகள் அருளிய சிதம்பரமும்மணிக்கோவையின் முதல் அகவற்பாவினால் அறியலாம்.

---

தொகுத்தவர் :- திரு. சொ. கிருஷ்ணன் அவர்கள், அருள் நெறித் தொண்டர், திருச்சி.

# GOD & RELIGION

## Extracts from the Nagpur University Convocation address delivered on 10-1-55

## by Sri C. RAJAGOPALACHARI

It is natural that when hundreds of young men and women gather to receive the hall-mark of university education, the minds of elders congregated on the occasion and looking on turn to a reflection on the prevailing methods of education. There is a deep discontent in everyone's mind on this subject, a feeling that something is rotten in the state of Denmark.

* * *

Now, I propose to read to you a passage from a very great modern historian, Mr. Arnold Toynbee is Director of Studies in the Royal Institute of International Affairs in the University of London. He has just finished a great book of World History in ten volumes. The last volume deals with the inspiration of historians in their work. This volume begins with a most impressive passage on the meaning of history. We all know history to be a review of the big and significant activities of nations. Mr. Toynbee adds something more to this. It is worth while reading what he says to you who have successfully passed through an arduous University course.

"History is a dim and partial vision of God revealing Himself in action to souls that sincerely seek Him. Since no man hath seen God at any time and our clearest visions are but broken lights of Him, there are as many angles of vision as there are vocations and the historian's angle is only one among a number of diverse angles from which souls with diverse gifts and diverse experiences obtain diverse partial visions of God seen through diverse fractions of His inconceivably mighty works".

* * *

We are not concerned particularly with history. I have read the passage out in order that we may see what a great modern scholar thinks of the world and of God. This great historian whose studies and reflections have been deep does not think that God is a superstition. All our activities including studies such as you have gone through and all that you are going to do in the world in your life-time, are parts of an infinite whole, a whole that we shall do well in approaching with awe and reverence. Each little thing we are engaged in should be evaluated in that spirit and should be executed in that spirit. It is only then that we shall be doing something worth while and well. Everything we do we should look upon as an act of communion with God.

* * *

Right behaviour will come automatically, if you remember as Toynbee wants you to remember God and that you are part of an immense whole. Look on your activity as a part of God's work. Then will all your acts and failures give you some satisfaction and be useful to others also.

That is why the way of religion is necessary for all of us. What is this religion I speak about? Believe me, the teachings of religion are practically the same in all denominations and faiths. Let me summarise it for you, young Graduates.

First, the soul is an immortal entity which gives significance to body and life. This is Christianity, this is Hinduism, this is Islam, this is Judaism.

Secondly; we are governed by law to which the name of Karma is given in Hinduism, by which all action thought and word are followed by inevitable consequences that shape the journey of the soul and which cannot be escaped but by fresh action and for errors committed sincere repentence amounting to action. Do not believe that this rule of law



is only a Hindu doctrine. It is implicit in all faiths though they do not give it the name of Karma.

Thirdly; the grace of God can be always obtained by sincere supplication and by shaping mind and action to it. For God loves even as He rules. This is what every pious person in the world believes whatever be his faith. I have given you the essentials of Religion. Take it from me that these principles that I have set out are common to all faiths. Names differ but these are the principles. If you remember them and act intelligently and faithfully, all will go well with you and those around you.

Sir Bertrand Watson was a member of the British Parliament for seven years. He was Chief Police Magistrate in London for 13 years upto 1941. He has stated recently that the standard of living of all lower income groups has improved very considerably. Yet thefts and crimes in general have increased a great deal. The prime cause of all this according to him is the rapid loosening of the influence of religion over a large section of the community. When moral values are no longer regarded as absolute it is not difficult for the people to say to themselves, 'Why should I not do this?' Why should I not do that?' Nothing holds people back from doing what they imagine will further their own interest. Society run on these lines is heading for disaster. What Sir Betrand Watson has said of Britain applies equally to our country. He who observes can see how in our country now moral restraints and the fear of sin have been fast disappearing. We cannot afford to be complacent.

Economic progress is good. But a fundamental condition for getting the full advantage out of such economic progress as we make is that the man and women of our land should be trustworthy, good to one another and abhor evil. As the value of a fraction depends both on numerator and denominator the happiness of a people depends both on economic progress and on the elimination of misbehaviour.

If the latter grows apace while there is a slight increase in the production of wealth, the resulting national happiness is not increased but diminished.

The only way to put down the rising tide of greed and deception is to re-infuse the spirit of religion among our people, especially among the educated people who set for others standards of behaviour. We must see that economic uplift is secured by such means and in such manner that it does not at the same time evoke and increase greed and deception and a lowering of moral standards. We speak of artand culture and of literature. Let us not forget the root and the mother of all the art, theculture and the literature of which we are proud. viz., our religion. Not only is she mother that brought into being and nursed through childhood the art, the culture and the literature that are ours, but her milk of nourishment is required throughout and always. Art and culture and literature will be debased and perish without the continuous support and elevating and life-giving bloodstream of religion.

The idea that God is a notion born of superstition and fear has been abundantly proved to be wrong. Science in the higher regions has definitely found a great and infinite gap which nothing but God can fill. Travelling back from this, if we are intelligent and reasonable, we are compelled to be respectful and humble before the temples, the prayers, the rituals and the symbols that form the external substance of the prevailing great religions of the world. Abstract nouns can make essays and books but cannot make religion for a whole people of whom more than half cannot read books or essays or remember what they read. Abstract ideas cannot live but as creepers clinging to and continually drawing life from concrete forms and traditions which can be seen, felt, heard and remembered without effort. Thus has religion lived and grown and helped mankind and so it must continue. Let us not neglect the plain lessons of history.



# அமெரிக்காவில் சமய உணர்ச்சி

திருமதி. காந்திமதி அம்மையார் அவர்கள்

விஞ்ஞானத் துறையில் அமெரிக்கா தேசம் அதிக முன்னேற்றமடைந்திருப்பதால் அந்நாட்டு மக்கள் அதிக லௌகிகப் பற்றுடையவர்கள், மதம், ஆசாரம் முதலியவற்றில் அவ்வளவாக நம்பிக்கை கொள்ளாதவர்களென உலகில் கிழக்குப் பகுதியைச் சேர்ந்தநாம் பொதுவாக அபிப்பிராயம் கொள்ளுகிறோம்.

வாழ்க்கை வசதிகளை அனுபவிப்பதில் அமெரிக்காவை மிஞ்சும் வேறெந்தத் தேசமும் உலகில் இல்லை. யாவரும் அறிந்ததொரு உண்மைதான் இது. அதேபோல் ஆத்மீக சாந்தத்தைப் பெறும் வழிதான் என்னவென்று கண்டுபிடிப்பதிலும் ஆர்வம் கொண்ட அத்தேசத்தைப்போல வேறெந்தநாடும் தற்போது குறிப்பிட நம்மால்இயலாது. இங்குவந்ததிலிருந்து நான்செய்யும் சொற்பொழிவுகள் பெரும்பாலும் மாதா கோவில்களில்தான் நடத்தப்படுகின்றன. என்னை பிரசங்கத்திற்கு அழைக்கும் மக்களில் பெரும்பாலும் மாதாகோவிலில் சேவை செய்பவர்கள்.

இங்கே மக்கள் மதாசாரத்தைப் பின்பற்றுவதில் எவ்வளவு ஆர்வம் காட்டுகிறார்கள் என்பதுதான். அமெரிக்கர் ஓடோடி ஓடோடி காலம் வீண்போக்காது உழைப்பவர்கள்தான். இப்போது இத்தேசத்தில் "எதற்காக சதா ஓடுகிறோம்? எவ்வளவு உழைத்தும் மனச்சாந்தி இல்லையே! ஏன்? இதற்கு என்ன காரணம்? எல்லா வசதிகளைப்பெறும் பாக்கியமிருந்தும் மற்ற ஏழைநாட்டு மக்களைவிட நாம்ஏன் அதிக சந்தோஷமாகயில்லை? நாம் ஓடோடி உழைப்பது அமைதியும் இன்பமும் வாழ்க்கையில் பெறத்தானே? வாழ்க்கையின் பலன்தான் என்ன?" என்று இப்படிப் பலவாருக மக்கள் களைத்த மனப்பான்மையுடன் நினைக்கத் தொடங்கி விட்டார்கள். சாந்தம் பெறும் வழியை இந்தியாவிடமிருந்து கற்றுக்கொள்வதில் அதிகமாக முனைந்திருக்கிறார்கள். மாதாகோவில் குருக்கள் சபையோருக்கு முன்னே மூலஸ்தானத்திலுள்ள பெரிய சிலுவைக்குக்கீழே அமைக்கப்பட்டிருக்கும் இடத்தில் நின்று பேசும் அதே மேடையிலேற்றித்தான் என்னையும் பேச வைக்கிறார்கள்.

மத சம்பந்தமான சொற்பொழிவாற்ற மாதா கோவிலுக்கு செல்லும் போதெல்லாம் நான் என்னுடன் எடுத்துவந்திருக்கும் மத சம்பந்தமான சித்திரங்கள், நடராஜ சிலை, இன்னும் இது போன்றனவற்றை எடுத்துப்போய்க் காண்பிக்க நான் தவறுவதில்லை.

பெரிய மாதாகோயில்களில் நான் வந்து பேசுகிறேன் என்றால் அன்று கூட்டம் பிரமாதமாக இருக்கும். பலருக்கு உட்காரக்கூட இடம் கிட்டாது. நம் மதத்தைப்பற்றி எளிய முறையில் மெதுவாக விளக்கிக்கொண்டு போகையில் இங்கு பெரிதும் ஆச்சரியப்படுகிறார்கள். சொற்பொழிவின்போது மாதாகோவிலில் பிரதான பீடத்தில் வைக்கப்பட்டிருக்கும். சிலுவைக்குப் பக்கத்திலேயே நமது நடராஜ சிலையை வைத்து அதன் பொருளை விளக்குவேன். நமது நடராஜா மெள்ள ......மெள்ள அமெரிக்காவில் மாதா கோவிலிலேயே அநேக தடவை அமர்ந்துவிட்டார். இந்த நடராஜா சிலை உருவத்தைக் கொண்ட சில கழுத்துச் செயின்கள் இங்கு விற்கக் கண்டேன்! இப்போது இங்கே ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமை மாலையிலும் ஹிந்து மதத்தைப்பற்றி பிரத்தியேக வகுப்புகள் நடத்தி வருகிறேன்.



---

நமது கலை, கலாசாரம் பற்றி அமெரிக்கருக்கு விளக்கிக்கூற அமெரிக்கா சென்றிருக்கும் திருமதி ரா. காந்திமதி அம்மையார் அவர்கள் (சிதம்பரம், திரு. என். தண்டபாணிப்பிள்ளை அவர்களின் திருமகளார்.) சென்னை 'நாரதர்' வாரத்தாளுக்கு எழுதிய திலிருந்து எடுத்த குறிப்பு.

# வருங்காலம்

ஜோதிஷார்ணவம்

**பிர்மஸ்ரீ முத்துசோதிடர் அவர்கள், திருவிடைமருதூர்.**

*(ஜய-ஹு மாசிமீ 1-உ முதல் 29-உ முடிய)*
*(13—2—55 முதல் 13—3—55 முடிய)*

**1. மேஷம்:** அசுவதி, பரணி, கார்த்திகை ¼.

அசுவதி 1, 2 பாதம் மஹோந்நத ஸ்திதியையும் சந்தோஷத்தையும் தரும். பரணி கார்த்திகை 7 பாதங்களும் முற்பாதியில் அதிக சிரமத்தைக் கொடுத்துப் பிற்பாதியில் சமபலனைத்தரும், எல்லாவற்றிற்கும் அசிரத்தையும் அவமதிப்பும் ஆலஸ்யமும் அநாசாரமும் நாஸ்தீகமும் உண்டுபண்ணும். இவற்றைக் கடவுள் பக்தியால் குறைத்துக் கொள்ளலாம். புதன் சனி சுபமாகா. வியாழன் சுபம்.

**2. விருஷபம்** கார்த்திகை ¾ ரோஹிணி, மிருகசீரிஷம். ½

கார்த்திகை 2, 3, 4 பாதமும் மந்தமாய் ஓடும். எந்தக் காரியத்திலும் அலக்ஷியபுத்தி உண்டுபண்ணும். ரோஹிணி நான்கு பாதங்களும் வியாதியையும் கடனையும் கொடுக்கும். மிருகசீரிஷம் 1, 2 பாதம் நஷ்டத்தையும், அவமதிப்பையும் தரும். பொதுவாய் விருஷபராசி பலன் சுகமில்லை. சனி செவ்வாய் சுபம்.

**3. மிதுனம்:** மிருகசீரிஷம் ½ திருவாதிரை, புனர்பூசம் ¾.

திருவாதிரை நான்கு பாதங்களும் லாபத்தையும் நஷ்டமான பொருள்வரத்தையும், உத்யோகமேன்மையையும், கீர்த்தி பத்திரத்தையும், நன்மதிப்பையும், ஆரோக்கியத்தையும் தரும். மற்ற மிருகசீரிஷம் பின் 2 பாதமும், புனர்பூசம் 1, 2, 3 பாதமும் என்றுமிலாத துக்கபலனைப் பலவிதத்திலும் அடையச்

செய்யும். தெய்வபலமே இராது. எதிலும் அபஜயம் காட்டும், சனி புதன் அசுபம். வியாழன் சுபம்.

4. **கடகம்:** புனர்பூசம் ½ பூசம், ஆயில்யம்,

புனர்பூசம் நான்காம்பாதம் ஒருவாறு சுபமாகக் காட்டும், தொழில் கிட்டும், சுவல்ப லாபம்வரும். கடன்நீங்கும். வியாதி நிவர்த்தியாகும், பூசம் நான்கு பாதங்களும் அசுபத்தையே விருத்திபண்ணும், தெய்வபலமெல்லாம்போய் துர்கிரஹயோகம் வலுக்கும். களத்திர புத்திராரிஷ்டம் உண்டுபண்ணும். ஆயில்யம் 4 பாதங்களும் ராஜாங்க அநுகூலத்தையும் தெய்வ பலப் பிரகாசத்தையும் கடன் நிவர்த்தியையும் உலகில் மதிப்பையும் தரும். புதன் சனி சுபம்.

5. **சிம்மம்:** மகம், பூரம், உத்திரம் ¼.

மகம் நான்கு பாதங்களும் ஜயத்தைத்தரும். உத்யோகம் கிடைக்கும் கீர்த்திபத்திரம் உண்டாகும். பெரியோர் மேலோர் அன்புகிட்டும். சுலப சாத்தியமாகும். பூரம் நான்கு பாதங்களும் ஆலஸ்யம் சுகக்குறைவு சஞ்சலம் சஞ்சாரம் சத்துருபயம் பீடை ரோகவிருத்தி அதிக செலவுகள் ஏற்படும். வெள்ளி சனி சுபம்.

6. **கன்னி:** உத்திரம் ¾, ஹஸ்தம், சித்திரை ½.

உத்திரம் 1, 2 பாதம் சமபலன் தரும். உத்திரம் நாலாம் பாதம் ஹஸ்தம் 1 பாதம் உத்யோகலாபம், சந்தோஷம், நஷ்டதன பிராப்தி. விவசாயத்தில் விசேஷலாபம் இவைகளைத்தரும். ஹஸ்தம் 2, 3, 4 பாதங்கள் தூர யாத்திரை, விசேஷ மதிப்பு, அதிக செலவினங்கள், வெகுநாளாக எதிர்பார்த்து நடவாத காரியங்கள் ஏற்படல் சரீரத்தில் உஷ்ணபீடை உண்டாகுதல், தார புத்திராதிகளின் வியாதி பீடையால் கவலை, காரியங்கள் சுவல்ப்ப தாமதமாய் நடத்தல். முதலியவைகள் மிசிரமாய் நடக்கும். தெய்வபலம் காக்கும். எங்கும் கீர்த்தியும் நன்மதிப்பும் வியாபாரிக்கு ஜயத்துவமும் உண்டாகும், புதன் வியாழன் சுபமாகும். சித்திரை 1, 2 பாதங்கள் லாபத்தைத் தரும். சுபமாகும்.



7. **துலாம்:** சித்திரை ½, சுவாதி, விசாகம் ¾.

சித்திரை 3, 4 பாதங்கள் சுகதுக்கம் சமானமாக நடக்கும் வஸ்திராபரணச் சேர்க்கை, காலிகன்று சேர்க்கை, கிருஷிபூமி லாபம் இவைகள் கிட்டும். சுவாதி 1, 2 பாதங்கள் கவலையைத் தந்து பிறகு சுபத்தையும் சந்தோஷத்தையும் உண்டுபண்ணும். சுவாதி 3, 4 பாதங்கள் சம்பூர்ண ஜயத்தையும், லாபத்தையும், கீர்த்தியையும் தரும். விசாகம் 1, 2, 3 பாதங்கள் அதிக சிரமத்தையும், வேலையாட்களினால் கஷ்டங்களையும், நஷ்டங்களையும், அவமானத்தையும் தரும். சனி, வியாழன் துக்கமாகக் காட்டும். புதன் சுபவாரமாகும்.

8 **விருச்சிகம்:** விசாகம் ¼, அனுஷம், கேட்டை.

விருச்சிகராசி ஒன்பது பாதங்களும் சுபசந்தோஷத்தை மேன்மேலும் விருத்திபண்ணும். உத்யோகலாபம், தூரபிரயாணம், பெரியோர் நேசம், இல்லற சுகம், தனஸமிருத்தி, தான்யஸ்மிருத்தி, வாகன விருத்தி, ஆரோக்கியம் முதலிய சுபங்களையே தரும். புதனும், வியாழனும் சுபமாகும்.

9. **தனுசு:** மூலம், பூராடம், உத்திராடம் ¼.

தனுர்ராசி சம்பந்தப்பட்ட ஒன்பது பாதங்களும் மிசிரமாய் நடக்கும். அதிகலாபமிராது. எதிலும் மந்தமாய்ப் போய்க் கொண்டிருக்கும். வியாபாரிகள் நஷ்டமடைவார்கள். மனம் ரொம்ப நிம்மதியடையாது. சதா கவலையையே கொடுக்கும். சனி சுபமாகும். வியாழன் அசுபமாகும்.

10. **மகரம்:** உத்திராடம் ¾, திருவோணம், அவிட்டம் ½

திருவோணம் நான்கு பாதங்களும் எதிர்பாராத உயர்வைத் தரும், லாபம் ஏற்படும், மனம் சந்தோஷமுண்டாகும்,

உத்திராடம் 2, 3, 4 பாதங்களும், அவிட்டம் 1, 2 பாதங்களும் முற்பாதியில் லாபமாகவும் பிற்பாதியில் கஷ்டபலனையும் தரும். வியாழன் சுபமாகவும், வெள்ளி கலகமாகவும் இருக்கும்.

## 11, கும்பம்: அவிட்டம் $\frac{1}{2}$ சதயம், பூரட்டாதி $\frac{3}{4}$.

கும்பராசி சம்பந்தப்பட்ட ஒன்பது பாதமும் அலைச்சலையும் அதிக உழைப்பையும் தரும், மாதத்தின் பிற்பாதியில் விசேஷ லாபத்தையும் உத்யோக ஏற்றத்தையும் கிருஷிமூலமான லாபங்களையும் சுபசோபனுதி பலன்களையும் தந்து சந்தோஷம் உண்டுபண்ணும். புதன் வியாழன் சுபமாகும்.

## 12. மீனம்: பூரட்டாதி $\frac{1}{4}$. உத்திரட்டாதி, ரேவதி.

பூரட்டாதி நாலாம் பாதம் அசுப பலனைத்தரும். மனோ வியாகூலம் உண்டாகும். நஷ்டம் அதிகமாகும். உத்திரட்டாதி நன்மதிப்பைத்தந்து மனம் சாந்தி யடையும். லாபமுண்டாகும். ரேவதி நான்கு பாதங்களும் பிரயாஸையின்பேரில் லாபம் தரும். சத்துரு நாசம் ஏற்படும். ஜயமுண்டாகும். தொழில் ஓங்கும். மாதக்கடைசியில் அதிக தொங்கல் காட்டும். அதிக செலவினங்கள் உண்டாகும். புதனும் வியாழனும் சுபமாகும்.

**குறிப்பு:** உலகில் ஸாதுக்கள் தர்மிஷ்டர்கள் விருத்தி யடைவார்கள். தனதான்யங்கள் விசேஷ விருத்தியாகி விலைவாசிகள் குறைந்து ஏழைகள் சுகமடைவார்கள். தீவாந்தரங்கள் யுத்தபீதியால் அகப்பட்டுக்கொண்டு பிரஜைகள் கவலைப் படுவார்கள். தர்மம் ரக்ஷிக்கும்.



வேளூர் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமிக்குச்
சந்தனுபிஷேகம் புரியும்போது



தருமபுர ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
அடியார்கள் சூழத் தரிசித்தல்.

# வேளூர்

தருமபுர ஆதீனப்புலவர், சித்தாந்த ரத்நாகரம்,
திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்

## 1 நாடு

### சோணாடு

'நீர்நாடு' என்ற சிறப்பு நம் சோழநாட்டிற்கே உண்டு, நாடெல்லாம் நீர்நாடு தனை ஒவ்வா நலமெல்லாம்' என்று அருண்மொழித்தேவரே பாடியருளினார், 'தண்ணீரும் காவிரியே, தார்வேந்தன் சோழனே, மண்ணாவதும் சோழ மண்டலமே' என்று பாட்டியின் பாட்டின் உண்மையை இன்றும் காட்டிக் கொண்டிருக்கிறது இச்சோழவளநாடு. 'பொங்கர்நாடு' (தொல். சொல். 400. உரை) என்றிருப்பதால், சோலைவளநாடு என்பதன் மரூஉவே சோழநாடு, சோணாடு என்றறிக. "மேதக்க சோழவளநாடு சோறு உடைத்து." என்பது சோறு உடைய சிறப்பு சோணாட்டிற்கே உண்டு என அறிவிக்கின்றது. ஏரிகளாலும் நீர்முகக்கும் ஏற்றங்களாலும் பிறநாடுகளில் வருவாய் வளம் உண்டாகும். அவையெல்லாம் சோழநாட்டின் வருவாய் மிகுதியை நோக்கின், அரிந்த வைக்கோலின் அடியில் சிந்திய நெல்லுக்கும் ஒப்பாகமாட்டா. இது பொய்யோ? இன்றும் கண்கூடாகப் பார்க்கலாம். அன்று தொல்காப்பியத்து உரை மேற்கோள் ஒன்று,

"ஏரியும் ஏற்றத்தி னாலும் பிறர்நாட்டு
வாரி சுரக்கும் வளன்எல்லாம்—தேரின்
அரிகாலின் கீழ்உகூஉம் அந்நெல்லே சாலும்
கரிகாலன் காவிரிசூழ் நாடு."

என்று (புறத்திணை யியல் 31.) உணர்த்திற்று. நெல்லரி போரால் நீர்மடை அடைக்கும் செருக்கு, வேறு எந்நாட்டில் இருக்கும்? "சாலி அரிசூட்டால் மடை அடைக்கும் நீர்நாடன்" என்றதனால், சோழமன்னர் அடைந்த சீர்த்திக்கு அளவுண்டோ? அவ்வளவும் அவர்கள் வழிபட்ட மூர்த்தியின் கீர்த்தியே ஆகும்.

## வளவர்

மன்னர்க்குப் பெயர் பலவகையால் வரும், சோழமன்னர்க்கு நாட்டின் பெருவளத்தால் பெயர் வந்தது. **வளவர்** என்பது சோழ வேந்தர்க்கே உரிய சிறப்புப்பெயர், '**கிள்ளிவளவன்**' என்ற பெயரை ஆராய்ந்தால், அதன்மேன்மை நன்கு புலப்படும். அதற்கு அவ்வளம் எல்லாம் எதனுல் ஆயின? சிவபெருமான் தலைமேல் கங்கை இருக்கிறது. அதைக்காண - கண்டு கூடிக் கலக்க - கலந்து களிக்க - களித்து அதன் பெருமையில் பங்கீடு பெற, அக்கங்கையைப்போலவே அவன் முடிமிசை ஆட்டப் பெற்றுச் சிறக்க, மேற்கு மேட்டுப் பாங்கிலிருந்து கிழக்கு நோக்கிப் பள்ளமடையாக வெள்ளம் எடுத்து, உள்ளம் உவந்து ஓடிவருகின்றன ஆறுகள். பாண்டி நாட்டில் சிவாலயம் சிலவே இருக்கின்றன. அந்நாட்டில் சில யாறுகளே செல்லுகின்றன,



வேளூர்க் கோயிலின் விண்ணேக்கம்

சோழநாட்டில் கோயில் இல்லாத ஊரே இல்லை. ஓரே காவேரி பல வடிவம் எடுத்து, எங்கும் காலால் ஓடிக், கருத்தால் ஓங்கிக், கடவுள் தலையில் கலந்து, கங்கையினும் புனிதம் உற்றது. வேறு ஆறுகளும் அவ்வொழுகலாற்றை இந்நாட்டில் மேற்கொண்டு வளஞ்செய்கின்றன.



'கங்கையின் புனிதம் ஆய காவிரி நடுவு பாட்டுப்
பொங்குநீர் பரந்து பாயும் பூம்பொழில் அரங்கம்'

என்றார் தொண்டரடிப் பொடியாழ்வார். அவர்க்குக் காவிரி கங்கையினும் சிறந்தது என்று எதனுல் தோன்றிற்று? திருவரங்கத்தைச் சுற்றும் பெரும் புண்ணியம் காவிரிக்கு உள்ளதால் தானே! மூர்த்தியை வழிபடும் பேற்றால் அன்றிக் கீர்த்தி உண்டாகுமோ? அரசர்க்கும் உழவு இல்லையேல் அரசு இல்லை. 'உழவினர் கைம்மடங்கின் இல்லை' என்பது பொய்யாமொழி. உழவுக்கு மழையே முதல், மழைக்கு வேதம் நீதி மாதர்கற்பு ஆகிய மூன்றும் முதல். இம் மூன்றற்கும் வழிபாடே முதல்.



மண்டபத்தின் மேலிருந்து காணுந்தோற்றம்

" செந்தீ முதல்வர் அறம்நினைந்து வாழ்தலும்
வெஞ்சின வேந்தன் முறைநெறியில் சேர்தலும்
பெண்பால் கொழுநன் வழிச்செலவும் இம்மூன்றும்
திங்கள்மும் மாரிக்கு வித்து "

(திரிகடுகம், 98)

### மறையொலி

உயிர்களது முயற்சியால் தோன்றும் ஒலிக்கு அழிவுண்டு, 'முயற்சியிற் பிறத்தலான் ஒலி நிலையாது' என்ற (தொல். சொல். சூ. 74. 'இன் ஆன் ஏது ஈங்கு' என்பவற்றுள் ஆனுருபிற்குக் காட்டப்பட்ட) ஓர் உதாரணம் அதைக் குறிப்பதே ஆகும். ஒலிக்கு மூலமானது அழியாது. அதனால் அதை 'அக்ஷரம்' என்றனர். அக்ஷரம் - அழிவில்லாதது. இவ்வுண்மையை உணர்ந்த நல்லிசைப் புலவர் ஒருவர், ஒலிகள் முயற்சியால் தோன்றுவன. வேதமுழக்கமும் முயற்சியால்தான் உண்டாகின்றது. ஆனால், காவிரி நாட்டில் உண்டாகும் வேத முழக்கம் நித்தியமாகி நிரம்பி நிற்கின்றது. சோணாட்டில் எல்லாத் திசையிலும் அந்தணர் பயிலும் வேத முழக்கம் அழிவடைவதில்லை என்று பாடினர். மறையொலி வெளியொலியே. மறைந்த ஒலியாய் உள்ளேமட்டும் ஒலிப்பது அன்று.

> 'ஒத்த முயற்சியான் ஒத்து வெளிப்படினும்
> நித்திய மாக நிரம்பிற்றே - எத்திசையும்
> தாவாத அந்தணர் தாம்பயிற்றிக் காவிரிநாட்டு
> ஓவாத ஒத்தின் ஒலி,'
>
> (தொல். புறத். 20 உரை)

இதில், 'பயிற்றி' என்று இருத்தலை நோக்கின், நச்சினர்க்கினியர், ஓதுவித்தலுக்கு இதை உதாரணமாக்கியதன் பொருத்தம் புலப்படும்.

## 2 ஊர்

### வேளூர்

சோழநாட்டில் எல்லாவூர்களும் நீர்வளத்தாலும் நிலச் செழிப்பாலும் இயற்கைத்தாயின் எழில்வளர் தோற்றத்தாலும் 'கண்ட இடமெல்லாம் கருணைக் கடலமுதம் மொண்டு கொளலாய் நிறைந்' திருக்கும், அவற்றுள் வேளூர் எல்லார்க்கும் விருப்பம் விளைக்கும் விழுப்பம் சான்றது. வேள், என்பதற்கு விருப்பம் என்றும் ஒரு பொருளுண்டு அன்றே? முருகப் பெருமானை எல்லாரும் விரும்புவதாலும் அவன் திருவடிநிழலைப் பெற்றுப் பிறவிக் கோடையைத் தீர்த்துக்கொள்ள வேட்டலாலும் அம் முழு முதல்வனை 'வேள்' என்றனர். காமதேவனை விரும்புவோரே பலராதலின், அவனையும் 'வேள்' என்றனர்





வேளூர்த் தோற்றம்

அவ் இருவருள் காமதேவன் (மன்மதன்) இருள் (அறியாமை) உள்ளபோது விரும்ப நிற்பவன். நம் தேவதேவன் முத்துக் குமாரசுவாமி ஒளி (மெய்யுணர்வு) உற்றபோது விருப்பூட்டி விளங்கியிருப்பவன். அதனால், இருளனை (மன்மதனை)க் 'கருவேள்' என்றும் ஒளியனை (ஆறுமுகக் கடவுளை)ச் 'செவ்வேள்' என்றும் பிரித்துணர்த்துதல் ஆவசியகம் ஆயிற்று. வேளூர் என்னும் பெயர் அவ்விரண்டற்கும் இடமாயிருந்து பெற்ற பெயரோ? யாதோ? யான் அறியேன்.

### வயல்வளம்

ஊரைச் சுற்றி நாற்புறத்தும் கண்ணுக்கு எட்டாத தொலைவெல்லாம் கழனிக்காடு, அளிந்தசேற்றுப்பரப்பு, எங்கும்

ஏர்க்கொழு முகந்து இயக்கிய விளக்கம், தாமரைக் கிழங்கு தயங்கிய அளறு, விண்மீன்களை வென்ற மண்மீன்கள் துள்ளிப் பிறழுந்தோற்றம், உழவரும் உழத்தியரும் நிலங்களுக்குத் தாமே கிழவரும் கிழத்தியரும் ஆகத் தருக்குற்றதோர் இருப்பு. (அது போய் நெடுங்காலம் ஆயிற்று. உடையார் எல்லாரும் கொடையாராக, உழவர் அனைவரும் கொண்டாராயினும், அத்தருக்கு, இக்காலத்து உழவர்க்குவாராது. வந்தாலும் நிலையாது) நன்றியும் கடவுட் பற்றும் கலந்த நாட்டுப்பற்று, அக்காலத்தின் தருக்கை வளர்த்தது. வயலில் உழத்தி, கள் ஊற்றுவாள். உழவன் குடிப்பான். அதைப் பார்ப்பவர்க்கும் அக்கள்ளுண்ணுங்களிப்பு நாக்கில் ஊறும். உழவன் உண்ணும் கள் முழங்கை வழியே ஒழுகி ஓடும். காவிரி நீராகிய சேதுராமற்கு அக்கள்ளொழுக்கம் ஓர் அணில் ஆயிற்று. வாளைமீன்கள் அப்புதிய கள்ளை நுகரும். கள்வெறியாலே துள்ளும். கள்ளுண்ட களி மயக்கத்தால், தாமரை மலர்மேல், அன்னத்திற்குச் சமமாகத் தம்மைத்தாமே எண்ணி உறங்கும். இதைப் புலவர் எப்படிப் பாடினர் என்று பாருங்கள்.

'கள்ள நீர்விழிக் கடைசியர் களிமது வார்க்க
மள்ளர்தாம் மகிழ்ந்து உண்ணும் அவ் வழி மதுப் பெருகும்
புள்ளலம்புதண் பணை தொறும் புது மது நுகர்ந்தே
துள்ளி வாளைகள் தூயசெங் கமலமேல் உறங்கும்'

வாளைகளுக்குப் பஞ்சணை வேறு ஏன்? மலரணையினும் மெல்லியது உண்டோ? உழத்தியர்க்குப் பொருமையோ? என்னவோ? தெரியாது. உழவர்க்கும் ஏதோ ஒரு நாட்டம்? குறிப்பு ஒன்று காட்டினர் உழவர். குறிப்பறியும் ஆற்றலில் உழத்தியர் இக்காலத்திலும் வல்லவராய் விளங்குகின்றனர். அது வள்ளுவர்க்கும் விளங்காது. அரும்புகள், முதிர்ச்சியால் உள்ளே இடம் பெருகப் பெருக அங்கு மணம் பெருகி நிற்கும். நின்றும், மலரும் வரையில் அம்மணம் புறத்தில் புலப்படாது. அதுபோல மகளிர் நகுதற்குக் கருதுவர். ஆனால் வெடிப்புச் சிரிப்பாக நகைக்க மாட்டார்கள். வாயோ மலர்மொட்டுப்போல மூடித்தான் இருக்கும், 'புன் சிரிப்பு' என்று புகல்வார் பிறர். பொன் சிரிப்பு என்றாலும் சிலர்க்குப் பொருந்தும், அவரது அகத்துக் குறிப்பைப் புறத்தே புலப்படுத்தாமல் நிறைத்துக் கொண்டிருக்கும் திறம் அந்நகை முகிழ்ப்புக்கே உண்டு. இதை வள்ளுவர் தெள்ளுரையால் அறிவோம்.





'முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளது ஒன்று உண்டு'

அத்தகைய குறிப்பெல்லாம் அறியும் ஆற்றலில் மிக்க அப்பேதையுழத்தியர், களைபிடுங்கியெறியும் பருவம் இதுவே என்று வாயாலும் சொல்லாமல், கையாலும் காட்டாமல், குறிப்பால் உணர்த்தினுல் உணராமல் ஒழிவரோ? களைபிடுங்கும் பருவத்தை வாயோ சொல்லவல்லது? கையோ காட்டவல்லது? குறிப்பால் தானே அறிவிக்கவும் அறியவும் கூடும்? களைகளைப் பிடுங்கியெறியத் தொடங்கினர் உழத்தியர். உயிர்களுக்கு எடுத்த எடுப்பில் உயர்ந்த பண்புகள் எய்தமாட்டா. இயற்கைப் பண்பே முதலில் முன்வந்து தொலையும், அதனுல், தமக்குப் பகையாயுள்ள பொருள்களில் தாமரைப்பூவில் முன் கண் விழுந்தது. பின் கை தொட்டது. பிடுங்கி எறிந்தது. தம் முகத்துக்குத் தாமரை சமம் என்றமொழியும் ஒழிந்தது என்று மனம் மகிழ்ந்தது. அடி(பாதங்)களுக்கு ஒப்பு என்ற தப்புக்காக ஆம்பலையும் மிதித்துச் சாம்படிகளைந்தன. அந்நிகழ்ச்சியை

'உறுபதம் அறிந்து உழவர்கள் காட்டஒண் பருவம்
நறுநுதல் கடைசியர்கள்நீள் கழனியில் நளினம்
இறையும் தம்திரு முகத்துஇணை பெருது எனப் பிடுங்கி
எறிவர் ஆம்பல் வாய் இணைபெருது என மிதித்திடுவர்'

என்று பாடினுர் அப்புலவர். அவர் பேர் வடுகநாத தேசிகர், ஊர் காத்தியாயனரிப்பு. ஊரும் பேரும் அவர் சிறப்பை விளக்குகின்றன. வேளூர்ப் புராணம் பாடியவர் அவர். அவர் கண்ட வயல்கள் நெற்கதிர்களால் வணக்கத்தைக் காட்டும். நெற்போரால் அவ்வணக்கத்தால் உண்டாகும் உயர்ச்சியை உணர்த்தும், சோணுட்டுக் குப்பைக்கும் கோடிப்பொன் மதிப்பு உண்டு விளைவைப்பெருக்கும் உரம் இப்புனல்நாட்டுக் குப்பைக்கு மிகுதியாய் உண்டு. அதனுல், பண்டைய நாளிலேயே,

" மருதின்
கொழுநிழல் குவைஇய குப்பையோடு அணைத்தினும்
பலர்மகிழ் தூங்க உலகு புறந்தரூஉம்
மாவண் சோணுட்டு ஊர் தொறும்
ஏரோர் களவழி வாழிய நெடிதே"

என ஆசிரியர் ஒருவர் ஆசிரியத்தால் வாழ்த்தி மகிழ்ந்தார்.

## பெயர்க்காரணம்

புள் (சம்பாதி, சடாயு என்னும் பறவை) வழிபட்டதால் புள்ளூர். இருக்குவேதம் போற்றியதால் இருக்கூர் (வேதபுரி). செவ்வேள் தொழுததால் வேளூர். இம்மூன்றும் சேர்த்துப் புள்ளிருக்கு வேளூர் என்றன திருமுறைகள். குரங்கணின் முட்டம்போல்வது இது. 'புள்ளிருக்குந் திருவேளூர்' எனச் சேக்கிழார் சுவாமிகளும் 'புள்ளூர்' என்று குமரகுருபரசுவாமிகளும் குறித்தருளினர்கள்.

"யோசனை போய்ப் பூக்கொணர்ந்து அங்கு ஒருநாளும் ஒழியாமே
பூசனை செய்து இனிது இருந்தான் புள்ளிருக்கு வேளூரே"

'வேதபுரி கந்தபுரி புள்ளூர் எனப்பொலியும் வேளூர்' (முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், செங்கீரை. 4)

## வழங்கும் பெயர்

ஆதிவைத்தியநாதபுரி, வைத்தியநாதம், வைத்தீசுவரன் கோயில், வைத்தியநாதன்கோவில் முதலிய பெயர்கள் நூல்களில் குறிக்கப்பட்டாலும், வைத்தியநாதன்கோவில் என்பதன் மரூஉவாக 'வைத்திஙங்கோயில்' என்பதே பெருவழக்காக உளது. அறிஞர் 'வைத்தீசுவரன்கோயில்' என்பர். தமிழ்ப் புலவர் முதலியோர் 'வேளூர்' என்பர். முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில், வேளூர் கந்தபுரி என்ற இரண்டும் மிகப் பயின்றுள்ளன; பாட்டுடைத் தலைவன் முத்துக்குமாரக்கடவுள் ஆதலின்.

---

### உளையும் உள்ளத்திற்கு

நெஞ்சே! பரபரக்க வேண்டா என்று பலமுறையும் உனக்குச் சொல்லியிருக்கிறேன். ஏன் அவசரப்பட்டு அழிகின்றாய்? சொல்வதைக் கேள். ஒவ்வொன்றையும் அமைந்திருந்து ஆராய்ந்து பார். தீயோருக்கும் தீங்கு நினைக்காதே; பிறர், செய்த நன்றி சிறிதாயினும் மறக்காதே. விரும்பிய பொருள் கைகூடவில்லையே என்று எண்ணி எண்ணி மனமுடைந்து போகாமல் இரு.

குருஞானசம்பந்தர்.

# கடிதங்கள்

HIMALAYAS,
*25—1—55.*

Salutations and prostrations. Om Namahsivaya.

I am deeply indebted to your Holiness for so very kindly sending me the beautiful volume of "Religious Discourses" delivered during the Summer Conference. Just as the Eternal Perennial Ganga flows from the Jata of Lord Siva, even so this Jnana Ganga flows in perennial flood-stream from the Dharmapuram Adheenam which is truly Kailasa on earth.

What I admire most in the present volume is that your Holiness's universal heart has embraced not only all the aspects of Hindu religion, but also Christianity and Islam, too. The world today needs such a lesson on Unity. The volume is a treasure-trove of supreme wisdom.

May God bless your Holiness with robust health and long life, and the Adheenam with ever-growing prosperity!

With reverential regards, Prem and Om,

Thy own Self,
SIVANANDA.

பரஞ்ஜோதியே !

அன்புகலந்த வணக்கம். ஓம் நம: சிவாய. தாங்கள் அவ்வப்பொழுது அனுப்பிவைக்கும் தருமபுர ஆதீன வெளியீடு வரும் 'ஞானசம்பந்தம்' பத்திரிகையும் ஒழுங்காகக் கிடைத்துக் கொண்டிருக்கின்றன. மிகவும் வந்தனம். "ஞானசம்பந்தம்" பொங்கல் மலர் மிக அற்புதமாக இருக்கின்றது. ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் சந்நிதானத்திற்கு எனது மனமுவந்த வணக்கம்

ஆத்மசொரூபம்,
சிவானந்தா

திருக்கோடிகா,
நரசிங்கன்பேட்டை போஸ்ட்.
15—12—54.

அன்பார்ந்த ஐயா,

'ஞானசம்பந்தம்' டிசம்பர் இதழ் (14-வது மலர்) கல்லூரி மாணவர், திரு. ச. தண்டபாணி மூலம் எனக்குக் கிடைத்தது. மட்டற்ற மகிழ்ச்சிகொண்டேன். இதுவரை பலமாத இதழ்களுக்காகப் பொருள்செலவும் காலச்செலவும் செய்துவிட்டோமே என எண்ணினேன். இம்மைக்கும் மறுமைக்கும் இன்பம் பயக்கக்கூடிய அருள் ஞானம், தெய்வவழிபாடு, இலக்கியச்சுவை, உண்மை அறிவு ஆகியவற்றைத் தெள்ளத் தெளிய எடுத்துக்காட்டுகின்ற இத்தகையநூல் எனக்குக் கிடைக்கப்பெற்றது நான்செய்த நல்வினைப்பயனே எனக் கருதுகின்றேன்.

தங்கள் அன்புள்ள,
T. K. சுப்பிரமணியப் பிள்ளை.

மதுரை,
19—1—55.

தருமை, ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களுக்கு

நம் ஆதீனத்து ராயஸம் திரு. துரைசாமி பிள்ளை அவர்கள் 17—1—55 இவ்விடம் வந்து ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேஸ்வரருக்கு அபிஷேக அர்ச்சனை செய்யவேண்டுமென்று ரூ. 25 மகா சந்நிதானத்தில் அனுப்பியதாகக் கொடுத்தார்கள். மேற்படி அபிஷேக அர்ச்சனை செய்து விபூதி குங்குமப் பிரசாதம் இத்துடன் அனுப்பியிருக்கிறது.

இது நிற்க தாங்கள் அனுப்பிய ஞானசம்பந்தம் பத்திரிகை சந்தா புஸ்தகங்கள் கிடைத்தன. மிக்க மகிழ்ச்சி இதுவரைக்கும் பல சந்தாதாரர்களைச் சேர்த்திருக்கிறேன். நேற்று இலங்கை போக்குவரத்து உதவி மந்திரி V. குமாரசுவாமி அவர்களையும் நம் வீட்டிற்கு வந்திருந்த பொழுது சந்தாதாரராகச் சேர்த்துள்ளேன்.

இங்ஙனம்,
ம. க. சுந்தரேசபட்டர்.

Printed & Published by K. Sundaresa Iyer, Agent, Dharmapuram Adhinam at
Gnanasambandam Press, Dharmapuram. (Mayuram). 10—2—1955.

